# "FATHER! TELL ME, WILT THOU CHERISH OR LET ME PERISH?"

*"Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."





அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்.] [God is Love: Knowledge is Power: *Aum*.

**"New Series"** ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.** **"Approved"**

புத்தகம். **22.]** **1914**ஸு ஜூன்மீ, ஆனந்தஸு ஆனிமீ [சஞ்சிகை **3.**


## "FATHER! TELL ME, WILT THOU CHERISH OR LET ME PERISH PRITHEE!".

### H. E. LORD HARDINGE AS OUR EARTHLY KING AND FATHER.

*The Viceroy*:—"I am your father and you are my children."—The *Viceroy in* 1913.

"I love to see them."—*The Viceroy at the Children's Fete, Simla*, 1914.

*Vox Populi*:—"Great men with the child-heart conceive and plan it well; but the underlings blundering spoil it all."—Teacher of children and Maker of men(*From the report of the first Home-Celebration of the Children's Day Festival.*)

THE CHILD'S QUERY :—

"Father! I, the Child of ages past, rejected and dejected come to thee!

"Tell me! Wilt Thou Cherish or Let me Perish? Prithee!"

—*A question "of Imperial concern to the future of our Empire."*

### THE CHILDREN'S DAY FESTIVAL 1914.

The Editor of the *Vivekachintamani* has suggested that the children's festival in honour of the Viceroy's brithday instead of being held in each school, may this year be held in every home in the midst of family surroundings. The school celebrations, he thinks, may follow later on when the schools are re-opened and in working order. So enthusiastic is the Editor that he has written to the *Times* (London) on the subject, and in the course of his letter he says :—"Their Excelliencies Lord and Lady Hardinge have, by the strong impression they have made on the child-mind of India, managed to leave their footprints on the sands of time which the coming generations of India are sure to read."—*The Madras Times*, 26th May.

"It is hoped that Children all over the Presidency will 'celebrate the day this year in their own homes on the 20th instant as a private festival."—*The Madras Times*, June 10.

The Assistant Private Secretary to the Viceroy writes from Viceregal Lodge, Simla, under date the 29th May, 1914. as follows :—

DEAR SIR,—I am directed to acknowledge, with thanks, the receip tof the printed letter on "The Children's Day Festival, 1914" which you have been so good as to send for His Excellency the Viceroy's information."

## LORD HARDINGE AS OUR EARTHLY KING AND FATHER.

Rev. Mr. Andrews of Delhi with his personal and intimate knowledge of Lord and Lady Hardinge as world-workers says :—

"At the present moment India has both earthly and spiritual kings who are popular and holy men. The earthly king is represented by Lord Hardinge, the present Viceroy of India. Lord Hardinge is a religious man. He is just and fearless and he ranks among the best men of the world. The Viceroy is ever solicitous about others. At the time of the outrage in Delhi, although he was suffering agony, his first inquiry after he came to his senses was about the ceremony of the day. He gave instructions that everything should go on as if nothing had happened to him. He was pained when he heard that the fireworks that were announced to take place the same evening were to be stopped and insisted that as they were the delight of the children, they should not be stopped on any account. The Indians of South Africa knew how warmly, zealously and fearlessly he had championed their cause and almost made it his own. Nor is Lady Hardinge less solicitous than her husband. She has specially deputed the speaker (Mr. Andrews) to organise a treat for the suffering children of India. Lady Hardinge's example has become infectious and the public-spirited men of India organised a similar treat on the same day for all the other children. Some one had suggested that more money should be set apart for European children as their upbringing was different from that of the Indian children. Lady Hardinge would have none of this idea."—Again it was Lord Hardinge who placated the Cawnpore Mussalmans by saying "I am your father and you are my children."

"To restore to their BEAUTIFUL MOTHERLAND an untarnished record of fame."—H.E. Lord Hardinge as "a Viceroy intensely jealous of the honour of the country."

"The School Children are very eager over the Vivekachintamani, it is their favourite Magazine."—*An Educationist's Tribute.*

"This favourite Children's Magazine...there is no doubt...is admirably conducted."

—THE MADRAS TIMES.




## THE PROBLEM OF POPULAR EDUCATION.

(i) "AN IMPERFECT & UNSUITABLE SYSTEM."

"Our course of instruction is a procruste's bed for all classes of schools . . . ." A. C. P.

"The despatch of 1854, which we hold to be our Educational Charter defines primary education as "consisting of so much knowledge, at least of reading and writing and of the simple rules of arithmetic and of land measurement, as would enable each man to look after his own rights." But the young agriculturist who stops with the primary course has not learnt sufficient arithmetic to find out for himself what assessment he has to pay......but must take for granted what the Karnam tells him. Of land measurement he has no knowledge......The small trader's son that has come home from the primary school measures out to a customer 4 seers of rice at $11\frac{1}{2}$ seers a rupee ; but must ask some other as to what money he should receive for the rice sold. This is what he is as fashioned by our code ; but the people mind their own interests better than the Government does for them and arrange among themselves for some kind of practical instruction to supplement that of the prescribed curricula. There are some things in the indigenous system of instruction which are good in themselves, but which in the sweeping condemnation of all that is old are ignored. Thus our primary education is imperfect in that it does not meet the requirements of the people."—*A. C. Pranatharthihara Iyer, B.A.*

"Dr. Rabindranath Tagore is one of those patriots whose patriotism take a practical shape and one of those who realise that if we established a system of popular education such as we might establish now, we should lay the foundationsofaCo-operativeCommonwealth that would become a state within the states far more powerful to do good to the people than the strongest and best Government has ever been, and making the people much more free than the most liberal Governments have ever been."— *Captain J. W. Petavel R. E. (Retired.) in the Asiatic Quarterly Review.*

## மனிதனை ஆளாக்கிவிடுவ தெப்படி?

ஜனங்கள் வித்யாப்பியாசம் செய்யு முறை.

வித்தை யென்றால் அறிவை விளக்குவது என்று பேர். அறிவு அறியாமையால் மூடப் பட்டிருக்கிறது. எப்படி யெனில், கிரஹணம் பிடித்த சூரியனைப்போல். சூரியன் ஒளிவிட் டெரிந்துகொண்டிருக்கச் சந்திரன் சூரியனுக் கும் பூமிக்கும் இடையில்வர, அதனுடைய சாயை (நிழல்) பூமியில்பட்டு சூரியகிரணங்க ளை மறைப்பது போல், அறிவு ஸ்வயம் பிரகாச மாய்த் துலங்கிக் கொண்டிருக்க மனம் இடை யே புகுந்து அறிவொளியை விழுங்கி அதன் சாயையால் விஷயங்களை ஸ்வரூபம் தெரியா மல் மறைக்கிறது. இப்படி திரைபோட்டது போல் மனது அறிவொளியை மறைப்பது நீங்கச் செய்வதற்கான அப்பியாஸமே வித்தி யாப்பியாஸம் எனப்படும். இதைக் கல்விசற் றல் என்றும் சொல்லுவர். இங்கே கல்வி யென்றால் 'மனப்பழக்கம்' என்று அருத்தம். "கற்றதோர்கல்வியும் மனப்பழக்கம்" என்று சொல்லி யிருக்கிறார் ஔவையாரும்.

'எட்டுப்படிப்பு' கல்வியல்ல.

கிளிப்பிள்ளை பேசப்பழகுவதுபோல் பொட் டைப்பாடம் செய்து நெட்டுருப்போடும் 'எட் டுப்படிப்பு' கல்வி ஆகமாட்டாது. நமது பள் ளிக்கூடங்களில் செய்யப்படும் போதனை இத் தன்மையதேயாம்,

'மனதை ஆளப்பிறந்தவன்' மனிதன்.

மனிதன் என்கிற சப்தத்துக்கே அர்த்தம், "மனதை யாளப்பிறந்தவன்." மன் = நினை. நினைக்கும் சக்தியுள்ளவன் மனிதன். நினைப் பான் கர்த்தா. நினைவு கருவி, நினைபொருள் விஷயம். மனிதன் சக்திமான், மனது சக்தி, மனதுக்குப் புலப்படுவது விஷயம். மனோசக் தியை ஆளப்பிறந்தவனை அந்த சக்திக்கு அடி மையாக்கும் படிப்பு அநர்த்த பரம்பரையை விளைக்குமேயன்றி அர்த்தத்தை விளைக்காது. அர்த்தம் என்றால் உட்பொருள் அல்லது கருப் பொருள். இதுஉட்பிரபஞ்சம், வெளிப்பிரபஞ் சங்களுக்கேற்க உள்ளர்த்தம், என்றும், வெளி யர்த்தம் என்றும் சொல்லப்படும். இதையே அகப்பொருள், புறப்பொருள் என்றும் பகுத்துக் கூறுவர், "இலக்ஷியம் கண்டதற்கு இலக்கண முரைக்கும்" புலவர்.

'ஆளாக்கிவிடுதல்' என்றால் என்ன?

இப்படிப்பட்ட சக்திவாய்ந்த "மனிதனை" ஆளாக்கிவிடுவதெப்படி? யென்பது தான் நாம் ஆலோசிக்க எடுத்துக்கொண்ட விஷயம். அப் படி யென்றால், சக்திமான் சக்தியை ஆளும் படி செய்வது எப்படி யென்று பொருள் படும்.

"PROCRUSTE'S BED."

"இயற்கை-விரோதமுயற்சி."

தலைக்குத்தக்கின குல்லா செய்து போட்டுக் கொள்வது செயற்கைதர்மம். குல்லாவுக்குத் தக்கினபடி தலையைத் திருத்துவது இயற்கை விரோதம். பூர்வம் ரோமராஜ்ஜியத்தில் 'ப்ரோக் ரஸ்டிஸ்' என்றொரு பேர்போன திருடனிருந் தான். இவன் வழிப்பறி செய்வதில் இணை யற்ற சூரன். இவனுடைய திருட்டுத்தொழிலை நடத்தி வருகையில் இவனுக்கு ஒரு யுக்தி தோன்றிற்று. 'மனிதர்கள் உயரமும் குட்டை யுமாக பேதப்பட்டிருப்பது அவலக்ஷணமாகத் தோன்றிற்று, ஆகையால் அதைத் திருத்த வேண்டி அவன் எல்லாரையும் ஒரேயளவாக ஆக்க ஒரு படுக்கை நிர்மாணித்து அதில் எல் லாரையும் படுக்கவைத்து அளந்து அந்த அள வுக்கு நீளமாயுள்ளவரைக் குறுக்கியும், குட் டையாயுள்ளவரை நீட்டியும் சரிப்படுத்தி வந் தான். அவன் செய்த இந்த அடாததொழிலி னால், இப்படிச் செயற்கை முயற்சியால் இயற் கை தர்மம் கெட நடக்கும் நடத்தையெல்லா வற்றையும் ப்ரோக்ரஸ்டியன் படுக்கை யென்று சொல்கிறது வழக்கத்தில் வந்துவிட்டது.

நமது பள்ளிக்கூடங்களில் பிள்ளைகளுக்குப் படிப்புச் சொல்லிக்கொடுப்பது இந்தப் பிரப லத்திருடன் செய்த வித்தையைப்போலிருக்கி றதென்று இப்பொழுது ஸ்கூல் இன்ஸ்பெக்ட

ராயிருக்கும் ராவ்பஹதூர் ஏ. வி. ப்ரணதார்த்திஹர ஐயர் அவர்கள் தமது அபிப்பிராயத்தைக் குறிப்பிட்டு அச்சிட்டிருக்கிறார்.

"பிரதம வித்யா லக்ஷணம்."

1854-வருஷத்து வித்தியா ஸம்பந்தமான கவர்ன்மெண்டதிகாரப் பத்திரத்தில் 'பிரதம வித்தை' யென்பது மனிதன் ஒவ்வொருவனும் தன் சுதந்திரத்தைப் பாது காத்துக் கொள்வதற்கு வேண்டிய ஞானம் பெறுவதற்கான் 'எண்ணெழுத்து வாசனை' யறிந்திருப்பதற்குச் சொல்லத்தக்கதாகும் என்று சொல்லியிருக்கிறது. அதை யெடுத்துரைத்து அதற்குமேல் திருஷ்டாந்தங்களும் எடுத்துக் கூறுகிறார். இப்பொழுது பிரதம வித்தை யென்று பள்ளிக்கூடங்களிற் சொல்லிக் கொடுப்பது இதற்கு இணங்கினதாக வில்லை யென்று நிரூபிக்கிறார்.

தற்கால பள்ளிக்கூட ஏற்பாடு.

பிரதமவித்தியா பள்ளிக்கூடம் என்பது பாலசிக்ஷை வகுப்புமுதல் ஏழாவது ஸ்டாண்டார்டு வரைக்குமுள்ள வகுப்புகளுக்குப் பேராயிருந்தாலும், காரியத்தில் நாலாவது ஸ்டாண்டார்டு வரையிலும்தான் பாடம் சொல்லுகிறார்கள். ஐந்தாவது ஸ்டாண்டார்டு 'ஸெகண்டெரி ஸ்கூல்' தரப்பைச் சேர்ந்ததாய் 'முதல் பாரம்' என்று பேர் பெறுகிறது. பிரதமபாடசாலையின் 5,6,7-வது ஸ்டாண்டார்டுகள் ஸெகண்டெரி (த்விதிய பாடசாலையின் கீழ்தரப்பைச் சேர்ந்ததாக (லோயர்ஸெகண்டரி வகுப்புகள்) என்று சொல்லி 1,2,3-வது பாரம் எனப் பேர்பெற்று வழங்கிவருகின்றன.

பிரதம வித்தியாசாலைப் படிப்புஎல்லாருக்கும் கிடைப்பதாகவிருக்கவேண்டும். ஆனால் அந்த மட்டோடு படிப்பை நிறுத்தி, கைத்தொழில் செய்து பிழைக்க விரும்பும் சாமான்யவகுப்புக் குழந்தைகளுக்கும், அதற்கு மேல்தரமாயுள்ள துவிதிய பாடசாலையில்படித்துமேலான விர்த்திபடைய நினைக்கும் விசேஷ வித்யாலாபத்தைக் கருதும் குழந்தைகளுக்கும் படிப்பு விஷயத்தில் தராதரம் ஏற்பட்டிருக்குமாதலால் அதற்காகவென்று பிரதமவித்யாப்பியாஸம் செய் பாடசாலைகளை இருபிரிவுகளாகப் பிரித்து, பிரதமவித்தையோடு நின்றுபோகிற படிப்புக் கேற்றதாக ஒன்றும், அதற்கு மேல் தரமாயுள்ள படிப்புக்கு ஆயத்தமாகப் பிரதம வித்தைபயிலும் குழந்தைகளுக் கேற்றதாக வொன்றுமாகப் பிரித்து முன்னதைத்தனியாக வைத்துப் பின்னதை 'ஸெகண்டெரி ஸ்கூல்' களின் கீழ்பாகமாகச் சேர்த்திருக்கிறார்கள். முன்வகைப் பாடசாலை மிகவும் சொற்பம். தமிழ்ப் பிராந்தியங்களிலெல்லாம் பதினைந்து இருபது ஸ்தாபனங்களுக்கு மேல் இராது என்று சொல்கிறார். பின்னது மூன்னூறு முதல் நானூறு வரையிலிருக்கும். நாலாவது ஸ்டாண்டார்டு வரையில் பிரதமவித்தை போதிக்கும் பாடசாலைகள்தான் ஜாஸ்தியாயிருக்கின்றன. இவை தமிழ்ப்பிராந்தியங்களில் மட்டும், சுமார் 15-அல்லது 20-ஆயிரம் இருக்கும். இப்பாடசாலையில் படிக்கும் குழந்தைகளுக்கு பாலவித்யாப்பியாஸம் செய்வது தான் மிகவும் முக்கியமான கடமையாகவிருக்கிறது. "வாலிபமும் காகிதமும் வாய்ந்தவுருக்கொள்ளும்" என்பது இவர்களுக்கே உண்மையிற் பொருந்தும். சிறு குழந்தைகளுக்குப்பள்ளிப்பழக்கம் செய்கிறவர்கள் ஸத்திய சந்தர்களாயும் குணசீலர்களாயு மிருக்கவேண்டும். இந்த யோக்கியதை ஆசானிடத்தில்லாவிட்டால் குழந்தைகள் மனம் நேர்வழியிற் செல்லாது கோணிப்போகும். "முதற் கோணல் முற்றுங்கோணல்" என்றபடி இந்த மனக் கோணல் கடைசிவரையில் உள்ளத்திற் படிந்து முற்றுங்கோணலாகவே முடிகிறது.

"திரிகரணசுத்தி"

என்பது ஏற்பட்டால்தான் வித்தியாப்பியாஸம் பயன்படுவதாகும். வாய்மை (ஸத்தியவிருதம்) இருந்தால் தான் அஹம் தூய்மைப்படும். வாய்மைதவறினால் அஹம் மாசுபடிந்துபோம். அஹம், புற மிரண்டும் வேறுபட்டுப் போம். வேறுபட்டால் அப்புறம் வில்லங்கம் தான்.

உள்ளே யொன்றும் உதட்டிலேயொன்றுமாகப் பேசும் வழக்கமும், நினைப்பதொன்றும் நடப்பதொன்றுமாகப் பிரவிருத்திக்கும் வழக்கமும் அனுஷ்டானத்தில் தானே யேற்பட்டு வேரூன்றி விடும்.

இப்படி உள்ளும்புறமும் பேதப்பட அதிலிருந்து எல்லா அநர்த்தங்களும் விளைகின்றன. திரிகரண சுத்தியேற்படக் காரணமின்றிப் போகிறது. திரிகரணசுத்தி யில்லாத போது வலிப்பு வந்தவன் அவயவங்கள் போல், வாக்கும், மனமும், செய்கையும் வேறுபட்டு ஒற்றுமை யின்றி மூலைக்கொன்றாக இழுத்துக் கொண்டு போகக் கோணங்கிக் கூத்துக்கிடமுண்டாகிறது. இதனால் வரும் அநர்த்தங்களை யெடுத்துக்கூறி ஹேன்றிக் இப்ஸன் என்பவர் ஒரு கிரந்த மெழுதியிருக்கிறார். அதை யங்கீகரித்து ராவ்பஹதூர் ஏ. வி. ப்ரணதார்த்திஹர ஐயரவர்களும் அதையே ஒரு கதையாகச் சுருக்கிச் சொல்லியிருக்கிறார். இப்படியாக

"ஸத்தியமே நன்மார்க்கம்
தவறுவரும் வேறெதிலும்"

என்பது கிரந்தகர்த்தா, உத்யோகஸ்தர், உலகஞானி, உண்மைஞானி, தத்துவஞானி யெல்லாராலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது.

அநர்த்தபரம்பரை.

வாக்கு, மனம் பேதப்பட்ட பொழுது ஸத்திய விருதம் அனுஷ்டிக்க முடியாததாய் விடுகிறது. வாய்மை கெட்டால் அஹத்தூய்மையும் தானே கெட்டுப்போம். அஹத்தூய்மை கெட்டால் அறிவு தெளிவு கெட்டு மயங்கிப்போம். அறிவு மயங்கினால் புத்திகெட்டு விதண்டாவாதம் செய்யப்புகும். குதர்க்கம் மிஞ்சினால் நினைவு தடுமாறி மனம் திராசு போல் நடுவு நிலை பற்றி நில்லாது கோணங்கிக் கூத்தாடும். ஐயோ! மனம் கோணிக்குரங்காட்ட மாடத் தலைப்பட்டு விட்டால் அப்புறம் பொய்யும், புளுகும் புனைசுருட்டும் மலிந்தெழும். தன்னையன்றி தானறியாமல் நெஞ்சகத்தே வஞ்சகப் பேய் குடிகொண்டு இல்லாத கூத்தெல்லாம் ஆட்டி வைக்கும். "வஞ்சித்தார் வாழார்" என்பது உண்மையாதலால் வஞ்சகநெஞ்சுக்காளானர் வாழ்நாளெல்லாம் வீண்நாளாகக் கழிப்பர். "குடிகெடுக்கும் நெஞ்சுக்குக்குற்றேவல்" செய்து தானும் கெட்டு பிறர்குடியையும் கெடுத்துப் "பிடிபடுக்கப்பட்ட களிறு" போல் மோஹவலையில் சிக்கிப் படுகுழியில் விழுந்து பாழாவார்.

"எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்."

ஆதலால் "எண்" என்பது ஒன்றிரண்டு மூன்று என்னும் கணக்குப் போடுதலன்றி அந்த எண்ணுக்கு லக்ஷியமாயுள்ள பொருளையும் அறிவதற்கான சங்கல்பசக்தி (நினைவு)க்கும் கூடப் பொருந்தும். "எழுத்து" என்பது சப்தத்தைக்குறிக்கும் லிபிகளேயன்றி, அந்த சப்தத்தின் உட்பொருளாய் அழியாத் தன்மை யுடையதாயிருக்கும் மனோசங்கல்பங்களாலான கற்பனாலங்கார சித்திரங்களையும் குறிக்கும். "சித்திரமும் கைப்பழக்கம்" என்றபடி மனதினால் நினைத்ததைக் கையினால் சித்தரித்துக்காட்டுவதெல்லாம் "எழுத்து" ஆகும். இந்த "எழுத்து" எல்லாவற்றிற்கும் காரணமாயிருப்பதால் இது மூலமாய்ப்பிறந்த அக்ஷரங்களை மாத்ரிகாதேவதைகள் என்று சொல்லுவர் பெரியோர்.

"மாத்ரிகாதேவதைகள்" என்றால் அளவைக் குறிக்கும் பிரகாசரூபங்கள் என்று அர்த்தங்கொள்ளும். இக்காலத்தில் 'X. Rays' N. 'Rays' என்று கண்டுபிடித்துப் பேர் வழங்கிவருகிற ஒளிமயமான சக்திகளெல்லாம் 'மாத்ரிகாதேவதை'களின் கூட்டுறவால் ஆனவையென்று சூக்ஷ்மஞான முள்ளவர்களுக்கு பிரத்தியக்ஷப் பிரமாணமாய் நிரூபித்துக்காட்டலாம். நமது மந்திரசாஸ்திரம் முழுவதும்இந்த ஒளிமயமான சக்திகளை மூலசக்திகளிலிருந்து உண்டுபண்ணி அவைகளைக் காரியத்தில் உபயோகிக்கும் வழியைப்பற்றிப் போதிக்கும் நுட்பநூலாகும்.

"தூங்கற்ற நூலளவேயாகுமாம் நுண்ணறிவு" என்றபடி ஒருவனுடைய நுண்ணறிவு (சூக்ஷ்ம புத்தி) மனப்பழக்கத்தால் தான் கற்ற சாஸ

திர உண்மையைக் கூறும் நூல்களின் அள வினதாயிருக்கும்.

"டுக்ருங்கரணே,"—"மூடமதே"

'டுக்ருங்கரணே' யென்று தர்க்கசாஸ்திர இலக்கணத்தை மட்டும் கற்று இலக்கிய ஞானம் இல்லாதவன் 'மூடமதி'யே யாவன். அவனுக்குக் 'கல்வியினலாயபயன்' சித்திப்ப தில்லை. பள்ளிக்கூடத்தில் வாசிக்காதவர்களுக் கும் "நீரளவேயாகுமாம் நீராம்பல்" என்றது போல் அவர்களுடைய உலகஞான முதிர்ச்சி யால் 'கல்வியினலாயபயன்' பூர்த்தியாக சித் திக்கும். ஆகையால், ஒவ்வொருவருக்கும் அவ ரவருடைய

மனோபக்குவமறிந்து போதிக்கவேண்டும்.

இதுவே மனிதனை ஆளாக்கிவிடும் வழியா கும். மற்றப்படி மாடுகளை மந்தையில் மறைத்து வைப்பது போல் பிள்ளைகளைக் கூட்டமாய்க் கூட்டி 'எல்லாருக்கும் ஒரே சொட்டு!' என்று "குல்லாவுக் கேற்றதலை" செய்கிற மாதிரியாக, இன்ஸ்பெக்டர் 'எடியுகேஷன் கோட்' என் கிற அச்சிட்ட விதிகளை யனுசரித்து நடக்க, வாத்தியார்கள் இன்ஸ்பெக்டர் நடத்தைக் கிணங்கி நடக்கவேண்டி இட்டபாடத்தைத் தட்டாது சொல்லித் தன் கடனைத் தீர்த்து விடு வதென்றிருந்தால், "எண்ணைச் செலவேயன்றி பிள்ளை பிழைப்பது பூஜ்யந்தான்" என்கிற வசனப்படி பெற்றோர்களுக்கு பணச்செலவும் ஸர்க்காருக்குப் பொருட் செலவும் வாத்தியா ருக்குச் சம்பளமும் புஸ்தகம் விற்பவர்களுக்கு லாபமும் தான் சித்திக்குமே யன்றி பிள்ளை கள் தேறி முன்னுக்கு வருவது ஏதோ அரு மையிலும் அருமைதான். பள்ளிக்கூடத்தில் தான் பிள்ளைகள் "நித்தியம் நித்தியம் உன்னி மூவா!" என்று கடனிழவுக்குப் படித்து வருகி றார்களே யென்று, அவர்கள் மனதை உற்சா கப் படுத்தித் தேற்றுவதற்கான முயற்சி செய்து அவர்களை முன்னுக்கு வரப்பார்த்தா லும் அதற்கும் இடங்கொடாமல் இடையூறு செய்கிறார்களே யன்றி சாதகசாதனனுகூலம் செய்வதாயில்லை. இதையெல்லாம் உள்ளுணர்ந் தே வரகவி டாக்டர் ரவீந்திரநாத் டாகோர் தனிவழிசென்று போல்பூரிலுள்ள சாந்திநிகே தனத்தில் சர்க்கார் உதவியின்றிப் பாடசாலை யேற்படுத்தி நடத்திவருகிறார்.

பிரகிருதி தர்மத்துக்குப் பங்கம் வரக்கூடாது.

மனிதனை ஆளாக்கி விடவேண்டுமென்றால் பிரகிருதி தர்மத்துக்குப் பங்கம் வராமல் பிரவிருத்தி மார்க்கத்தில் தேறி அவன் தானாக அறிவு விருத்தியடைந்து வரல்வேண் டும். அதற்கு அனுகூலங்கள் ஏற்படாத வரையில் "பிள்ளையார் பிடிக்கப்போய்க் குரங் காய் முடிந்தது" என்கிற கதையாகத்தான் எல்லாம் முடியும். இந்த ரகஸியத்தை கனம் லார்ட் ஹார்டிஞ்சு பிரபு அவர்கள் தமது "பெற்ற மனம் புற்றாக" உள்ளங்கரைந்து உண் மை யுணர்ந்து கொள்வாராயினர்.

'ஹாரோ'வில் நடந்த ஸம்பவம்.

சீமையிலே 'ஹாரோ' என்னும் பிரபலமான பள்ளிக்கூடத்தில் அவருடைய பையன் ஒரு வன் வாசிக்கும் பாக்கியமுள்ளவராக, அவ னைப்பார்க்கவென்று வருஷாந்த விளையாட்டு விசேஷ காலத்தில் (Annual Cricket Match) அந்த இடத்துக்குச்சென்றார். அங்கே அவ ருடைய பையனோடு கலந்து உறவாடி வருகை யில், இந்தியச் சிறுவன் ஒருவன் அப்பள்ளி யில் படிப்பானாக, அவன் மற்ற இங்கிலீஷ் பிள்ளைகளோடு சரிசமானமாகக் கூடிக் குலாவி வருவதைப்பார்த்து மனங்களித்து, இங்கே ஜாதி வித்தியாஸம் ஒன்றும் பாராட்டுவதில்லை யோ வென்று பையனைக்கேட்டார். அதெல் லாம் நாங்கள் இங்கே பாராட்டுவதில்லை யென்று பையன் சொல்ல, "ஐயோ! எங்கு மிப்படி நடந்தால் இராஜ்ஜியம் எவ்வளவு நல்ல ஸ்திதியிலிருக்கு"மென்று சிந்திக்கலா னார். அது முதல் குழந்தைகளுக்குக் கல்வி போதிப்பதில் அவர்களைச் சரியாக நடத்திப் பழக்குவது இராஜ்ஜிய க்ஷேமத்துக்கு மிகவும் முக்கியமான விஷயமென்றுணர்ந்து அப்படி

யே இந்தியா மந்திரி முதலானவர்களிருக்கும் சபையில் வற்புறத்திப் பேசினர். கல்கத்தா விலிருக்கையில் பள்ளிப் பிள்ளைகளோடு கலந்து பழகி அவர் குணத்தைக் கிரகித்துக் கொண்டார். டில்லிப்பிரவேச காலத்தில் வெடிகுண்டினல் படு கஷ்டம் பட்டுக்கிடக்கும் பொழுதும், அவருடைய குழந்தை-மனம் காரணமாகக் குழந்தைகளையே பற்றிச் சிந் தித்து, அந்த பாலசிந்தனையின் திவ்யபலத் தால் தேஹம் அனுகூலப்பட்டெழுந்தபொ ழுது அவருடைய ஜன்மதினத்தைக் குழந்தை கள் தம் திருநாளாகக் கொண்டாடச் செய்வ தே தெய்வபூசனையாகு மென்று உணர்ந்து அப்படியே நடந்து கொள்வாராயினர்.

சனம் டயமண்ட் ஹார்டிஞ்ச்.

அவருடைய குழந்தைகளில் கனம் டய மண்ட் ஹார்டிஞ்சு என்பவர் சென்ற மேமீ 18உ ஸிம்லாவில் நடந்த பாலர்திருவிழாவில் இதர குழந்தைகளோடு கூடிக் குலாவி 'ராட் டணம்' சுற்றி விளையாடி மகிழ்ந்தார். அந்தப் பெண்மணி பேரால் குழந்தைகளும் பெற்றோ ரும் பெரியோரும் சேர்ந்துபயோகிக்கக்கூடிய (Merry-go cart) 'ஸாரட்டு' நிர்மித்து அதைக் குழந்தைகள் ஞாபகசின்னமாகக் கொண்டா டக் கருதி யிருக்கிறார்கள்.

---

## THE MEANING OF SECONDARY EDUCATION.

"Perhaps the most significant extension downward of the domain of the secondary school is that which is coming in response to the demand for vocational educatiou in the lower schools. Children who are not going to high school must be allowed to pursue differentiated courses in the upper grades of the elementary school. The boy who is going into the trades and has no thought of high school cannot with equity be required to do the same work that is required of the boy who is going to become a clergyman (clerk) and looks forward to a College education. Many boys have to make a choice between the trades and professions before they leave the seventh grade. The seventh grade must provide for such boys by providing a type of organization similar to that now established in high school."

"In Germany one of the chief marks of distinction between secondary education and higher education is to be found in the fact that the secondary student is put through a required curriculum, while the student in the higher schools, especially the Universities, is allowed to elect freely the courses which he wishes to pursue."—*C. H. Judd, School of Education, University of Chicago.*

துவிதீய வித்யாலக்ஷணம்.

"மனிதனை ஆளாக்கிவிடுவது எப்படி?" என் னும் தலைப்பின்கீழ் ஜனப்பொதுவில் எல்லா ருக்கும் இன்றியமையாத பிரதமவித்யாப்பி யாஸத்தைப்பற்றிச் சிறிது விஸ்தரித்துப் பேசி னோம். கல்வி யென்றால் "மனப்பழக்கம்" என்று ஔவையார் சொல்லியிருப்பதுபோல் "வித்யாப்பியாஸம்" என்றாலும் அறிவுதெளியப் பழகும் மனப்பழக்கத்திற்கே பேராம். "மன, மொழி, மெய்" என்கிற திரிகரணங்களும் அறிவு விருத்தியாவதற்கு இன்றியமையாத சாதக சாதனங்களாம்.

முவ்வகைப் பயிற்சி.

முதலாவது, மனம் நினைக்குங்கருவியாதலால் சங்கல்ப சாதனமாம். இரண்டாவது, மொழி நினைத்ததை வசனிக்கும் கருவியாதலால் வாக்கு சாதனமாம். மனதினல் நிதானித்து நினைத்து (சங்கல்ப ரூபமாகி) மொழியினல் வசனித்து (நிச்சயரூபமாகி) காரியமாக விளங்குவதற்குத் தயாராயிருப்பதைக் கர்மமாகச் செய்வதற்கு மூன்றாவதாகிய மெய் (உடல்) கருவியாயிருப்ப தால் கர்மசாதனமாம். இம்மூன்று கருவிகளும் காரணகாரியதோரணையினல் ஒன்றுபடப் பொ ருந்தியிருப்பதினல் அந்த ஒற்றுமைக்குப் பங் கம் வராது எண்ணெழுத்துப் பயில்வதே பிரதம வித்யாலக்ஷணமாகும். இந்த லக்ஷணத்துக்கு

லக்ஷியமாயுள்ளது (அகப்பொருள்) திரகரண சுத்தியாம். இதற்கு மனப்பழக்கம், நாப்பழக்கம், வினைப்பழக்கம் அல்லது, "வினைத்தது முடிக்கு மாற்றல்" என்கிற மூன்றுவிதப் பயிற்சிவேண்டும்.

"எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்" என்றது மனப்பழக்கமாம் கல்வியும், நாப்பழக்கமாம் இனிய பாஷாஞானமாகிய இலக்கிய ஞானமும் (நூலறிவும்), வினைத்ததை முடிக்கும் ஆற்றலளிப்பதற்குரிய கைப்பழக்கமாம் எழுத்தும் கண்போலிருந் துதவுமென்பதைக் குறித்தன்றி வேறில்லை. இதுதான் முதற்படி அல்லது ஆரம்பவித்தை. பிரதமவித்தை யென்றாலும் அர்த்தம் ஒன்றே. இப்பொழுது இரண்டாம் படியாகவுள்ள வித்யாப்பியாசமுறையைப் பற்றிச்சிறிது விசாரிப்போம்.

துவிதீய வித்யாலக்ஷணம்.

துவிதீய வித்யாசாலை யென்பது இங்கிலீஷில் "Secondary school" என்பதைக் குறிக்கும். இது இரண்டாம் படியான வித்யா போதம் செய்யும் ஸ்தாபனம் என்று அர்த்தம் கொள்ளும். இதற்கு மேல் மூன்றாம்படியாகவுள்ளது மேல்தரப்படிப்பு (Higher education) எனப் பேர் பெறும். அது (1) ஸர்வ கலாசாலையில் நுழைந்தவர்கள் படி, (2) ஸர்வ கலாசாலையில் நுழைந்து தேறினவர்கள் படி, (3) ஸர்வகலாசாலையில் படித்துத்தேறினவர்கள் படி யென்று முத்தரப்பட்டு விளங்கும்.

இப்படியாக வித்யாமுறையின் பலதரப்படிகளும் ஐந்து வகையாகி நிற்கும். இதைப் பஞ்சாக்ஷரப்படி யென்று சொல்வதுண்டு. அக்ஷரம் என்றால் "அழியாதது" என்று அருத்தம். இந்த ஐந்து படியையும் படிப்படியாக ஏறிச் சென்றால் தான் "கல்வியின் பயன்" பெறற்படும்.

"கற்றதனாலானபயன்" "வாலறிவன் நற்றாள் தொழல்" என்று சொல்லியிருக்கிறார். அப்படி யென்றால்,கடவுளை யறிந்து வழிபடுதலேகற்றதனாலான பயன் என்றருத்தம், மற்றதெல்லாம் அதனுள் அடங்கும். ஜீவனோபாயம் தேடுவதெல்லாம் ஜீவன், கடைத்தேறத்தானே! அறிவு தெளிந்தாலன்றி ஜீவன் கடைத்தேறுவதில்லை. அறிவுஎன்பது எல்லாம்கடந்துள்ளது: அது எங்கும் வியாபகமாயுள்ளது. "அங்கிங் கெனாதபடி யெங்கும் பிரகாசமாய்" இருப்பது எதுவோ அதுவே அறிவுதானாகும். அந்த அறிவு அருவமாயுள்ளது. அதுவே உருவமாய் விளங்கிக்காட்டும். அருவுருவாயிருந்து தோன்றி மறைவதும் உருக்காட்டி யுருவழிப்பதும் அதுவே. அது ஐந்துபடியுமேறிப் பூரணவித்யாஸம்பந்நர்களானவர்களுக்குத்தான் சாக்ஷாத்காரமாய் விளங்கும். மற்றவர்களெல்லாரும் கற்றுக்குட்டிகளாய்க் கல்வி பயில்கின்றவராவர். அதாவது மனதைப்பழக்கிப் பழக்கி அது அறிவுக்கு அடங்கி நடக்கச் செய்யப் பயில்பவராவர்.

"எழுநிலைக் கோபுரம்."

பிரதமவித்தை எழுநிலைக்கோபுரம் போல் ஏழுவகுப்பாகப் பிரிக்கப்பட்டிருக்கிறதென்று சொல்லிக் காட்டினோம். திரிகரணமு மொத்துழைக்கப்பழகினபின் கைவேலை செய்து பிழைப்புத்தேடுவார் ஏழைகள். அதற்கு மேல் இரண்டாம்படி யேறிப்பார்க்க விரும்புவோருக்கு இன்றியமையாத கலைக்கியானம் சித்திக்கப்போதிப்பது துவிதீயவித்யாமுறையாகும். "கல்வியைக்கல், கற்றபடிநில்" என்று சொல்லியிருக்கிறார் பெரியோர். முதற்படியில் திரிகரணசுத்தி யின்னதென்பதைக்கற்று அங்கே கற்றபடி மன,மொழி, மெய் மூன்றும் நிற்கப்புகுவது தானே இரண்டாம் படியில் கற்கவேண்டிய வித்தை. அதற்காக இலக்கண இலக்கியபாடங்களும், சரித்திர, பூகோள சாஸ்திரங்களும், கணிதநூல்களும், பூதபௌதிக ரஸாயன உண்மைகளைப் போதிக்கும் நூல்களும் இன்னனவும் துவிதீயவித்யாசாலையில் பாடங்களாக ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இவற்றில் சிறுபாகம் பிரதமவித்தையோடு படிப்பை முடித்துத் தொழில் பழகப் போவார்க்குப் போதிக்கப்பட வேண்டியிருக்கும். ஏனெனில் அவர்களுக்கு இந்த கலைக்கியா

னம் சிறிது வேண்டியது அவசியமாகும். திரிகரணங்களும் அறிவு தானாய் விளங்கும் அறிவானுக்குப் படிந்து நடக்கக் கற்பது தானே "பாடம்" என்கிறபொருளுக்கு லக்ஷணமாகும். "இலக்கியங்கண்டதற் கிலக்கண மியம்புவர் புலவனூர்" என்பராதலால், குழந்தைகளுக்கு விஷயஞானம் உண்டாகப் (Object lessons) பொருள்-பாடங்கள் போதித்தும், போதித்த பின் அவர்கள் புலனறிவால் கண்டபொருள்களுக்கு லக்ஷணம் இன்னதென்பதை விசாரித்தறியப் போதித்தும், இப்படி "லக்ஷிய-லக்ஷண" தோரணையறிய அவர்கள் அறிவு விசாலிக்கப் பழக்கல் வேண்டும். பிரதமபாடசாலையில் எண் கணக்குக் கற்றபின், கீழ்மாற்று, குழிக்கணக்கு, கணிதசாஸ்திரம், எண்ணலளவை, எழுத்தளவை முதலான அளவை சாஸ்திரங்களைக் கற்கப்பழகல் இரண்டாம் படியில் கற்கத்தக்கனவாம். அப்படியே சரித்திரம், பூகோளம், ஜனகணிதம், வர்த்தக வியாபார சம்பந்தமான நூல், அர்த்தசாஸ்திரம் ஆகிய இவையும் பொருந்தும். இவையெல்லாம் முதற்படியில் கற்றது நிலைக்கக் "கற்றபடிநில்" என்னும் உபதேசமொழியின் அர்த்தத்தில் உட்பட்டடங்கும். இதற்குமேல் மூன்றும்படியாம் ஸர்வகலாசாலை வாசல் நுழைவான் இவ்வித நிர்ப்பந்தமின்றி கலைஞானங்கள் பலவற்றிலும் தனக்கிஷ்டமானவற்றைத் தெரிந்தெடுத்துப் பயிலுவானுவான். கலைகளெல்லாம் சூரியனும் கிரணங்களும் போல் மூலவித்தையோடு சம்பந்தப்பட்டிருப்பதால் அடிமரமேறினவன் அதற்கு மேலுள்ள பலகிளைகளின் ஞானம் உண்டான பின் எந்தக்கிளையைப் பற்றிச் சென்றும் அதன் நுனியில் பூத்துக்காய்த்துப்பழுத்துத் தன்னுள் விதையும், அவ்விதையினுள் அம்மரம் முழுமையுமாக விருக்கும் இரகவியத்தைக் காலாந்தரத்தில் பக்குவம் முதிர்ந்தவிடத்தில் தானே யறிவான்.

ஆதலால் பிரதமவித்தை யென்பது மரத்தின் மூலவேர் முதல் அடிமரம், கிளைகள், கிளைவேர்கள் இவற்றின் ஒற்றுமையை அறிவதாகும். இரண்டாவது படியில் துவிதீயமாகக் கற்கும் வித்தை மரக்கிளைகளுக்கும், கிளைவேர்களுக்கும் மரத்துக்குமுள்ள ஸம்பந்தத்தை ஐயந்திரிபற ஆராய்ந்து அறிவதாகும். அதற்கு மேல் இஷ்டம் போல் எந்தக்கிளையை அல்லது சாகையைப்பற்றி ஆராயப்புகினும் அவன் மரத்தின் பூரணஞானம் பெறுவதில் மதிமோசம் போகாதுதலால் அந்த மூன்றும் படியில் அவன் ஸர்வகலாசாலை வாசல் நுழைந்து இஷ்டம்போல் வேண்டிய கலையிலப் பாத்திரனுகிறன். துவிதீய வித்தையின் நோக்கம் திரிகரண ஒற்றுமை கலையாது தேஹ, மன, இந்திரியங்களைப் பழக்கி வழக்கப்படுத்துவதாகும். இது பிரதமவித்தைக்கும், மேலுள்ள ஸர்வகலாசாலை வித்தைக்கும் இடையில் அவை இரண்டுக்கும் ஸம்பந்தப்பட்டதாய் அடிமரம் வேருக்கும் கிளைக்கும் மத்தியிலிருப்பதுபோல் ஸம்பந்தப்பட்டு நிற்கும். இதை யுணர உணர்த்துவதே துவிதீய வித்யாலக்ஷணம்.

---

## MENTAL PICTURE GALLERY.
## THE VOICE OF GOD: A CHILD STORY.

"The description of a beautiful picture of the dedication of Samuel from the painting of Mr. W. W. Topham.

### பாவனா-சித்திரவிலாஸம்.

அருள்வாக்கு: பாலவித்யா உபாக்யானம்.

"One night, as the old priest lay in bed, the child Samuel came to his bed, and asked if Eli had called him. Eli sent him back to bed but a second and a third time the voice came and Eli told Samuel to say, if it came again, "Speak, Lord, for Thy servant heareth."

குழந்தைகள் தெய்வத்தன்மை வாய்ந்தவர்கள். தெய்வபக்தியுள்ளவர்கள். தேவதாப்பிரஸாதமாக மகப்பேறு பெறுகிறுர்கள். தசரதர் பிள்ளைப்பேறின்றி பெருந்தவஞ்செய்து திருவருட் பிரஸாதத்தால் இராம லக்ஷ்மண பரத-சத்ருகனர்களாகிய நான்கு பிள்ளைகளைப் பெற்று அஹமகிழ்ந்தார். பிரஹ்லாதன், துருவன், ருக்மாங்கதன் இவர்களெல்லாம் தெய்வ

பக்தி நிறைந்த தாய் வயிற்றிற் பிறந்தவர்கள். இவர்களைப்போல் எக்காலத்திலும் எத்தேசத்திலும் தெய்வப்க்தி நிறைந்தவர்களுக்கு ஈசுவர கிருபையால் ஸத்புத்திர ஸந்தானம் உண்டாகிறது. மார்க்கண்டன் தவத்திற்பிறந்தவனே. தவம் என்றால் இந்திரியங்களை யடக்கி ஒடுக்கி கடவுளிடத்தில் சிந்தை யெல்லாம் ஏகாக்ர (ஒருமுனைப்பட்ட) சித்தத்தோடு செல்ல கடவுள் மஹிமையில் ஈடுபட்டு அவருடைய திருவருட் பிராஸதத்தைப்பெற எதிர்பார்த்திருப்பதாம். இதற்கு நேர்விரோதமாய்ச் "கண்டதே காட்சி, கொண்டதே கோலம்" என்று மனதை, கிளைவிட்டுக்கிளை தாவிப்பிடித்தோடும் குரங்கே போல், நிலையற்ற விஷயங்களில் ஓடவிட்டு நிதானம் தப்பியிருத்தல் அவம் என்று சொல்லப்படும். அதாவது வீண் வாழ்வு என்று சொல்லப்படும்.

குழந்தைகளே! இதோ இந்தப் புஸ்தகத்தில் (Children's Magazine) வெகு அழகான சித்திரமொன்றிருக்கிறது. பாருங்கள். அதைப்போல் சித்திரப்படமெடுத்து அச்சிட்டுக் காட்டுவதற்கு மிகுந்த கைப்பொருள் வேண்டும். ஏனென்றால் அந்தச் சித்திரப் படம் சித்திரத்தொழிலில் வல்லவரான ஒரு வித்வான் எழுதியது. அதைப் பிரசுரிக்கும் சுதந்திரம் எல்லாருக்கும் கிடைக்க மாட்டாது. ஆதலால் அந்தப்படத்தையே பிரசுரிக்கக்கூடவில்லை. ஆனாலும் அதை நான் வாக்கால் சித்தரித்துக் காட்டுகிறேன். சற்று கவனம் வைத்துக் கேட்பீர்களானால் உங்கள் மனதில் அந்த மாதிரி சித்திரம் தானே அமையும். அதை யாராலும் அபகரிக்கமுடியாது. அன்றி, நினைத்தபோதெல்லாம் அந்தச் சித்திரம் உங்கள் மனக்கண் முன் வந்து நிற்கும். வேண்டாதபோது மனவெளியில் பத்திரமான ஒரு இடத்தில் மறைந்து கிடக்கும். இது மனதினுடைய சுபாவமான சக்திகளில் ஒன்று. இதற்கு பாவனைசக்தியென்று சொல்லுகிறது. இங்கிலீஷில் "Power of imagination" என்று சொல்லுவர். இந்த பாவனைசக்தியினால் தான் மனிதன் மற்ற மிருகங்களைவிட மேலானவனாயிருக்கிறான். ஆனாலும் அவன் பதவியைக் குலைக்கி அவனுக்குள் தானே மனோவிகாரங்கள் என்று சொல்லும் ஆறு பகைவர் இருக்கின்றனர். இப்படி உட்பகை ஆறுக்கும் சரியான வெளிப்பகையால் வரும் நஷ்டங்களைக் கணக்குப்போட்டுப் பார்க்கக்கறால் ஆயிரக்கணக்கேறி, லக்ஷம் கணக்காகத் தொகை வளர்ந்து விரிந்து நிற்பதைக்காணலாம். இதற்கெல்லாம் காரணம் சுருங்கச் சொல்லில்:—காமம் (ஆசை), குரோதம் (கோபம்), லோபம் (தங்நயமே பெரிதாகப்பாராட்டும் லுப்தத்தனம்), மோஹம் (மனம் இருளடைந்து மருளினால் செய்யும் பாதகங்கள்), மதம் (தான் கொண்ட அபிப்பிராயத்துக்கிரண்டில்லை யென்கிற அஹம்பாவக்கொழுப்பு), மாச்சரியம் (பிறர் நலம் பொறாமையினால் உண்டாகும் பொச்சாப்பு.)

பரிகாரமோவெனில்:—"காமோகாரிஷின் மன்யுனகாரிஷின் நமோநம:" என்று தியானித்தல். "இந்தப்பாபங்களெல்லாம் விவேகமின்மையால் காமம் செய்தது,மனம் செய்தது; இவற்றிற்கு வேறாயுள்ள அறிவுருவு தானான நான் செய்யவில்லை. (அதாவது நான் நிஷ்காம்மியன், நிர்விசாரன், நிர்த்தோந்தன், என்று சிந்தித்திருத்தலாம்.)

இந்தக் குணங்களெல்லாம் நற்றவத்தில் பிறந்த குழந்தைகளிடத்தில் ஸ்வபாவமாகவே பொருந்தி யிருக்கும். அக்குணங்களைப்பறி கொடுத்துப் பதறி யழாமல் பாதுகாக்கல் வேண்டும். இதுபெற்றோர்தம் கடன். விவேகத்தாய்க்கு இது இயல்பாக வரும். இனி நான் பார்த்த சித்திரத்தை வார்த்தையால் வர்ணிக்கிறேன். அதை உங்களுடைய மாசுமருவற்ற குழந்தைமனத்தில் பாவனசக்தியால் சித்திரப்படமாக அமைத்துக் கொள்ளுங்கள்.

**SUBJECT FOR FORMING A MENTAL PICTURE.**

பாவனு-சித்திரம் அல்லது கற்பனுபாடம்.

(1) அதோ ஒரு கோயில் தெரிகிறது பாருங்கள். அந்தக்கோயிலுக்குள் நாம் கும்பிடும் தெய்வமிருக்கிறது. அது நம்முன்னே யிருக்கிறது. வெளியில் பாவனத்தால் மட்டுமே காட்டப்பட்டிருக்கிறது. ஏனெனில் "தொட்டுக்காட்டாத வித்தை சுட்டுப் போட்டாலும் வராது" என்பது உண்மை.

(2) அந்தக் கோயிலில் கடவுள் ஸந்நிதானத்தில் ஒருபதிவிருதாசிரோமணி உள்ளக் குறையிரந்து "புத்திரபாக்கியம் அளிக்கவேண்டும் ஸ்வாமி ! எனக்கொரு குழந்தைபெறும் பாக்கியம் அளித்தால் அக்குழந்தையை உமது திருவடிச்சேவைக்கே அர்ப்பணமாக அளிப்பேன்!" என்று உள்ளங்குழைந்து கள்ளங் கரைய உள்ளமுருக உண்மைத்தவம் செய்து வரம் கிடக்கிருள் பாருங்கள். ஸத்புத்திரர்களான உங்கள் தாய்மார் இப்படித்தான் வரம் கிடந்து உங்களைப் பெறும்பாக்கியம் பெற்றிருப்பர்கள் என்று நம்புங்கள்.

(3) கோயில் மஹந்தாம் பூஜகர் பாவசமாதியிலிருந்த அவளைக் கடிந்து, அவள் சோஹத்தை மோஹமெனத் தப்பாகஎண்ணி அவளை வினவுகிறுர்.

(4) அந்த ஸ்திரீ அவருடைய வாக்கையும் வினவுதலையும் ஈசுவரப்பிரஸாதமாக எண்ணி, கடவுள் தன் பிரார்த்தனைக் கிரங்கிப் பிரஸந்நமாகித்தன்னைச் சோதிக்கிறுர் என்றெண்ணி, தன்னுள்ளக் கருத்தை ஒளிக்காது சொல்லுகிருள்.

(5) மஹந்துகுரு தன் தப்பெண்ணத்தையுணர்ந்து அவள் பக்திக்கு உவந்து "ஸ்வாமி நீ கேட்ட வானைக்கொடுப்பார்: அதிற் சந்தேகமில்லை!" யென்று திடங்கூறி அவளையனுப்புகிறுர்.

(6) பிள்ளைவரமிருந்து குழந்தையைப் பெற்ற பாக்கியசாலியாம் தாய அக்குழந்தையை அதன் ஐந்தாம் வயதில் குருவிடம் கொணர்ந்து ஸ்வாமி சேவைக்கென்று அர்ப்பணம் செய்கிருள்.

(7) அக்குழந்தை குருகுலவாசம் செய்கையில் கடவுள் வாக்கைக் கேட்டு குருபக்தியினுல் அதை குருவின் திருவாக்காக நினைத்து தூங்கும் குருவையெழுப்பி "ஸ்வாமி என் கூப்பிட்டீர்கள்?" என்று கேட்கிறது. அதற்கு அந்த குரு அக்குழந்தையைப் பார்த்து "நான் உன்னைக் கூப்பிடவில்லை! நீ தூங்குபோ!" என்று சொல்லி யனுப்பி விடுகிறுர்.

(8) குருவார்த்தையைக் கேட்டுத்தூங்கச் சென்ற குழந்தை மறுபடியும் அசரீரிவாக்குண்டாகக் கேட்டு அதை குருவ.க்காக நம்பி அந்தக் கிழமஹந்தாம் குருவை யெழுப்பி "ஸ்வாமி! என் கூப்பிட்டீர்கள்?" என்று கேட்கிறது. இரண்டாந்தரமும் அப்படியேஅனுப்ப, அக்குழந்தை படுக்கப்போய் மறுபடியும் தன்னைக் கூப்பிட்ட சப்தம் கேட்டு குருவினிடம் வந்து "என் கூப்பிட்டீர்கள்?" என்று கேட்கிறது.

(9) கிழகுரு இக்குழந்தை "திருவருளாற் பிறந்த அசரீரி வாக்கைக்கேட்டு" இப்படி நம்மிடம் வருகிறதென்றுன்னி மூன்ருந்தரம் அக்குழந்தை தன்னிடம் வந்து சொல்லிய பொழுது "அப்பா குழந்தாய்! நீ மறுபடியும் படுக்கைக்குப்போ! அந்த வாக்குப்பிறந்து உன்னை அடுத்தமுறை கூப்பிடும் போது "என்!" என்று கேட்டு "பகவானே தங்கள் அடியன் உற்றுக்கேட்கத் தயாராயிருக்கிறுன். மேலே சொல்லுங்கள்!" என்று மறுமொழி சொல் என்று சொல்லியனுப்பினுர். இந்த அவஸ்தையில் கிழகுரு சிறுகுழந்தைக்குக் கடவுளுடன் பேச வகையறிந்து உபதேசம் செய்துகொண்டிருக்கிற தருணம் பார்த்து அவர்கள் திருவுருவம் விளங்கச் சித்திரப்படம் எழுதியிருக்கிறுர்.

அக்குழந்தை பின்னுல் ஒரு பிரபலமான பகவத் பக்தனுக விளங்குகிறுர். அதைச்

சொன்னல் "வேதாந்தம்" என்று தாய்க்குப் பிள்ளை யுதவாதபடி பிரித்து விடுவார்கள். ஆகையால் அந்தச் சித்திரத்தை மனதில் பதிய வைத்துக்கொண்டு "இணையில்லா இவ் வுயிர்தான் இவ்வுடலை விட்டாலும் குணமே பெரியதென்று கொண்டுநீ வாழ்ந்துவிடுவாய்" என்னும் தாய்மொழியை உள்ளத்திருத்தி உண்மையாய் நடந்துகொள்ள வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறேன். உங்கள் அன்புள்ள,

விவேகத்தாய்.

## READINGS FROM THE BOOK OF NATURE.

SOME FACTS ABOUT THE MOON.
A LESSON IN NATURE STUDY.

### பிரகிருதி வித்யாம்சம்.
### சந்திரனைப்பற்றிய சில விஷயங்கள்.

ஆனையும் முயலும்: ஒரு கதை.

ஒருகாட்டில் ஓர் அரசயானை பல யானைகளோடு கூடிக்கொண் டிருக்கும்போது அங்கே மழையில்லாமையால் ஏரி குளங்கள் எல்லாம் வற்றிப்போய் தண்ணீர் கிடையாமல் தாகத்தால் வருந்தி நெடுநேரம் தேடிக் கடைசியில் தண்ணீர்தங்கிய தடாகததைக் கண்டது. உடனே தன் பரிவாரத்துடன் அதிலிறங்க அங்கே வாசம்பண்ணிக் கொண்டிருந்த முயல்களில் சில யானைகளின் கால்களின் கீழ்ப்பட்டு இறந்தன. மற்றும் சில முயல்களுக்கு கால் கைகள் ஒடிந்தன. இவ்விதம் நாசம்செய்து அந்த யானைகள் போனபிறகு மீதியிருந்த முயல்கள் கூடி வேறேரிடம் தேடிச் செல்லவேண்டுமென்று விசனத்துடன் யோசனைசெய்யத் தொடங்கின. அப்பொழுது அனுபவம் முதிர்ந்த ஒரு கிழ முயல்: 'நன்றுயிருக்கிறது! பூமி உண்டானது முதல் நாம் தங்கியிருக்கிற இந்த இடத்தையா விட்டுப்போவது! இந்த மூடயானைகளை முடுக்க வேண்டுமேயல்லாது வேறு யோசனை கூடாது' என்று சொல்லவே, மற்றமுயல்கள்: 'ஓய் கிழவனரே! அந்த உபாயம் இன்னதென்று சொல்லும்' என்று பரிகாசமாய்க் கேட்க, அதற்கு அந்த முயல் 'யானைகள் இவ்விடம் வராதபடி தடுப்பதை எனக்கு விட்டுவிடுங்கள்' என்று சொல்லி அங்கேநின்றும் புறப்பட்டு யானைகள் வரும்வழியில் ஓர் மேட்டில் உட்கார்ந்துகொண்டது. அப்படியே யானைகள் வந்தவுடன் அந்த முயல் 'அடா அரசயானையே!' என்று அதட்டிக்கூவி, 'அடா, நான் சந்திர தேவனுடைய தூதன்; நான் அவரிடத்திலேயே எப்பொழுதும் தங்கியிருக்கும் முயல்; அவருடைய பள்ளியறையாகிய தடாகத்தை நீங்கள் கலக்கிவிட்டீர்களென்று அவர் உங்களெல்லாரையும் கொல்ல எண்ணியிருக்கிறார்,' என்று சொல்ல, யானைகள் 'இவர் சந்திரமண்டலத்து முயல், பெரிய இடத்துப் பகை உதவாது' என்று அன்றுமுதல் அவ் விடத்தைவிட் டொழிந்தன.—என்ற இக்கதையை நாம் பஞ்சதந்திரத்திற் படித்திருக்கிறோ மல்லவா?

தூரதிருஷ்டிப் பார்வை.

அந்தமுரட்டு யானைகளை மோசமசெய்த மூடமுயலையே நாம் நமது வானசாஸ்திர பண்டிதரென்று கொண்டு சந்திரனிடத்துத் தோன்றும் கரியஉருவம் முயல்தானென்று தீர்மானம் செய்துவிடலாமா? அல்லது தக்க கருவிகளைக்கொண்டு பரிசோதித்து அறியலாமா? இக்காலத்திலோ தக்க கருவிகளுக்குப் பஞ்சமில்லை. தூரதிருஷ்டிக் கண்ணாடியென்று ஓர் விதக் கருவியுண்டு. அதன் வழியே தூரத்திலுள்ள பொருள்களை நாம் பார்ப்போமானல் அவைகள் சமீபத்திலுள்ள பொருள்கள்போலக் காணப்படும். இந்தக் கருவியைக்கொண்டு 'அம்புலிமான் தோசை' யென்று குழந்தைகளுக்கு சிறியதாய் வார்த்துக்கொடுக்கிற தோசைபோ லிருக்கிற சந்திரனை நாம் பார்ப்போமானல் நமக்கு அது வெகு பெரிதாய்க் காணப்படும். அதில் உயர்ந்த மலைகளையும் வெகு தாழ்ந்த ஆழமான பள்ளத்தாக்குகளையும் நாம் தெளிவாய்க் காணலாம்.

இரவல் ஒளி.

சந்திரனுக்கு சுயமான ஒளி கிடையாது.

சூரியனுடைய ஒளியானது அதில் உள்ள உயர்ந்த மலைகளில் தாக்க, நாம் பேசுகிற வார்த்தையின் சத்தம் சுவர்களில் தாக்கி சிலை (எதிரொலி) உண்டாவதுபோல், அம்மலைகளிலிருந்தும் நமக்கு வெளிச்சமானது பிரதி பலிக்கிறது. 'கிரொஸின் எண்ணெய்' என்று வழக்கத்தில் சொல்லப்படும் நிலத்திராவகம் விட்டு எரிக்கும் சுவர்விளக்குகளில் கண்ணாடிக்குப் பின்னால் தட்டு ஒன்று வைத்திருப்பதை யாரும் பார்த்திருக்கலாம். அந்தத் தட்டு எவ்வளவுக் கெவ்வளவு பிரகாசமாயிருக்கிறதோ அதற்குத் தக்கபடி தீபத்தின் ஒளியும் அதிகப்படும். அந்தத் தட்டு, நிரம்பப் பிரகாசமாயிருந்தால் தீபத்தின் ஒளியைப்பார்க்க கண் கூசும். எப்படி விளக்கின் வெளிச்சம் அந்தத் தட்டில் பாய்ந்து அதினின்றும் பிரதிபலிக்கிறதோ அப்படியே உலகத்துக் கெல்லாம் தீபம் போன்ற சூரியனுடைய ஒளியானது தகரத்தட்டுபோல் தாவள்ளியமான சந்திரனிடத்துள்ள மலைகளில் தாக்க "தீம்பால் கதிர் மணிக்குடத்தி னேந்தி வீழ்தரச் சொரிவதே போல்"*. என்றபடி பாலை பளிங்குக் குடத்திலெடுத்து ஆகாயத்திலிருந்தும் பூமியில் பொழிவதுபோல விளங்குகின்ற நிலவு ஒளியானது உண்டாகிறது. ஆகவே,

(1) வெண்ணிறந்றலிறை வெள்ளமெனவும்
பண்ணிறஞ் செறிந்திடை பரந்ததென்னவும்
உண்ணிறைகாம்மிக் கொழுகிற்றென்னவும்
தண்ணிறை நெடுநிலாத் தழைத்த தெங்குமே.
—கம்பர்.

(2) ஆறெலாங் கங்கையேயாய வாழிதாம்
கூறுபாற் கடலையேயொத்த குன்றெலாம்
ஈறிலான் கயிலையை யியைந்த வெண்ணினி
வேறியாம் புகல்வது நிலவின் வீக்கமே.-கம்பர்.

அதாவது, உலகத்தின்கண் அமிர்த வெள்ளமானதுபரவியது போலவும், இனிமையான சங்கீதமே[1] உருவெடுத்து எங்கும் நிறைந்ததுபோலவும், மனிதர் உள்ளத்தில் குடிகொண்டிருக்கும் அன்பானது வெளியே ததும்பிப் பெருகினது போலவும்[2], குளிர்ச்சி பொருந்திய நிலவானது எங்கும் இனிமையாய்த் தழைக்க, பரமானந்தத்தைத் தரும் அந்த வெளிச்சத்தில் எந்த நதியும் கங்கா நதிபோல் விளங்கிற்று. சமுத்திரங்களெல்லாம் பாற்கடல்போல விளங்கின. குன்றுகளெல்லாம் பரமசிவனது கைலாச பர்வதத்தைப்போல் விளங்கின, என்று அடங்கா குதூகலத்துடன் ஆனந்தபரவசமாய் அளவற்ற புலவர்கள் வர்ணித்துப் பாடியிருக்கும் இந்த நிலவொளி சந்திரனுக்கு சொந்தமல்ல. சூரியனிடத்தில் கடன்வாங்கி அது நமக்குச் செய்யும் தானம். ஆயினும் சமுத்திர ஜலத்தையுண்டு பூமியில் மழையாகப் பொழியும் மேகத்தை

"*உள்ளியுள்ள வெல்லா முவந்தீயுமவ்
வள்ளியோரின் வழங்கின் மேகமே"

அதாவது, பிரதியுபகாரத்தை எதிர்பாராமல் கொடுக்கிற கொடையாளிகளுக்குச் சமானமாக மேகத்தைச் சொல்லவில்லையா? அதுபோல் சூரியனுடைய ஒளியை நமக்குக் குளிர உதவுகின்ற சந்திரனையும் 'இரவுக்கு அரசியே, தெய்வமே'[3] என்றும், 'ஜகத்ஜோதியே'[4] யென்றும், 'தாரகணத் தலைவனே'[5] யென்றும் பற்பலவாறுகக் கொண்டாடத் தடையென்ன இருக்கிறது!

உருவல்ல: உருவகம்.

இது நிற்க. நமது தூரதிருஷ்டிக் கண்ணாடி.

* சிந்தாமணி. 'பாற்கதிர் பரப்பி மீனரசாண்ட வெள்ளி விளக்கத்து' என்றார் இளங்கோவடிகளும். 'பாற்கடன் மூகந்து மூரிவான் சொரிந்ததேயாமென' —கம்பர்.

1 Poetry is Universal. Shelley has the same idea very often, *e. g.* his 'An Ariette for music.'

2 Shelley has the same in his 'Prometheus Unbound.'

* கம்பர்.

3 Ben Jonson. 4 Homer. 5 சிலப்பதிகாரம். இவ்வடை மொழிகள் சம்ஸ்க்ருதத்திலும் தமிழிலும் வெகு சாதாரணம்.

யைக்கொண்டு சந்திரனை இன்னும் பரிசோதிப்போம். சந்திரனில் முயலைக் காணோம். ஆனால் மலைகளுக்குமத்தியிலனேக கெபிகள் இருக்கின்றன. அவைகளில் சூரியனுடையஒளி அதிகமாகத்தாக்காததினால் தூரத்துப்பார்வைக்கு அவைகள் கருப்புக் கோடுகள்போல் தோன்றுகின்றன. இவை தாம் பஞ்சதந்திரத்து யானைக்கு முயல்போல் காணப்பட்டன.

சந்திரனைப்பற்றிய சில விஷயங்கள்.

சந்திரன் பந்துபோல் வட்டமானது. அது பூமியைச் சுற்றியோடுகிறது. ஊசியைக்காந்தமிழுப்பதுபோல் உலகத்திலுள்ள ஒவ்வொரு பொருளும் மற்றைய பொருள்களையெல்லாம் தன்னிடத்திலிழுக்கிறது. பெரிய பொருளுக்குச் சிறிய பொருளைக்காட்டிலும் காந்த சக்தி அதிகம். பூமி சந்திரனைவிட மிகப் பெரிதாதலால் பூமி சந்திரனைச் சுற்றுவதற்குப் பதிலாக சந்திரன் பூமியைச் சுற்றிவருகிறது. அதே சந்திரனை மற்ற கிரகங்களும் தங்களிடத்திலிழுக்கிறபடியால் அது பூமியில் தாக்காதபடி விலகி செக்கில் சுற்றும் எருதுபோல் பூமியைச் சுற்றி வருகிறது. அப்படி யொருதரம் சுற்ற 27-நாள், 7-மணி, 43-நிமிஷம் 11-வினாடி ஆகிறது. சந்திரன் முதலில் ஒரு சிறு வெள்ளிக் கோடுபோல் தோன்றி பிறகு ஸ்திரீகளுடைய நெற்றிபோல் வளைந்து மன்மதனுடைய ஆக்ஞா சக்கரம் எனத் தோன்றி பிறகு தீயாருடைய செல்வம்போல் நாளுக்குநாள் தேய்ந்துவரக்காரணம் அடியில் வரும் படத்தால் அறியலாம்.




பூமியை பூ என்றும் சூரியனை சூ என்றும், சந்திரனை ச என்றும் அடையாள மிடுவோம். புள்ளிக்கோடிட்டுக் காட்டியிருக்கும் வட்டத்தின் வழியே சூரியனை பூமி சுற்றி ஓடுகின்றது. சின்ன வட்டத்தின் வழியே சந்திரன் பூமியைச் சுற்றிவருகையில் சந்திரமண்டலத்

தில் சூரியன் ஒளிபடும் பாகத்தை விளக்கிக் காட்டியிருக்கிறது. சந்திரன் பூமியைச்சுற்றிவருகையில் 1, 2, 3, 4, 4, 5, 6, 7, 8, என்கிற இடங்களிலெல்லாம் அதன் ஒரு பாதி சூரியன் ஒளிபட்டுப் பிரகாசித்தாலும் அதன் பிரகாசமான பாகம் முழுமையும் பௌர்ணமை தினத்தன்று போக மற்ற நாள்களில் பூமியிலுள்ள நமக்குத் தெரிகிறதில்லை. சந்திரன் உள்வட்டத்தில் 1, 2, முதலான ஸ்தானங்களி லிருக்கையில் அதன் பிரகாசமான பாதியில் நமக்குத் தோன்றும் பாகம் அதற்கு மேலுள்ள வெளிவட்டத்தில் காட்டப்பட்டிருக்கிறது. 1-ல் சந்திரனிருக்கையில் சூரியன் ஒளிபடாத சந்திரனின்பாதி பூமிக்கு எதிரே யிருப்பதால் அன்று சந்திரனிருப்பதே நமக்குத தோன்றுவ தில்லை. அன்றைக்குத்தான் அமாவாஸை. சந்திரன் தன் வட்டத்தின் வழியே பூமியைச்சுற்றி ஓடி 2-ல்வந்து நிற்கையில் சந்திரனுடைய வெளிச்சமுள்ள பாதியில் கால்பங்கு பூமியில் படுகிறது. (2-குறிப்பிட்ட படத்தைப்பார்க்க) அன்றைக்குத்தான் நாலாம்பிறை. 3-ல் சந்திரனுடைய வெளிச்சமுள்ள பாதியில் அரைப் பங்கும், 4-ல் முக்கால்பங்கும், 5-ல் முழுப் பங்கும் பூமியில் படுகிறது. இப்பொழுது தான் பௌர்ணமை. பிறகு 6-ல் முக்கால்பங்கும், 7-ல் அரைப்பங்கும், 8-ல் கால்பங்கும் படுகிறது. அதன் பிறகு மறுபடி அமாவாஸை. அகவே சந்திரன் பூமியை ஒரு முறை சுற்றிவருவதற்குள் ஒரு அமாவாஸையும் ஒரு பௌர்ணமையும் உண்டாகிறது. (மேலே, காட்டிய படத்தில் சந்திரன் ஒரு ஸ்தானத்திலிருந்து அடுத்த ஸ்தானத்துக்கு வர சுமார் $3\frac{1}{2}$-நாள் செல்லுகிறதென்றறிந்து கொள்ளவேண்டியது.)

சந்திரனுடைய ஒளி சூரியனுடைய ஒளியைக்காட்டிலும் 8 லட்சம் பங்கு குறைந்தது. அது மிரப்பக்குளிர்ந்தது. அதனால்தான் சந்திரனுக்கு "தண்ணன்" "சீதகிரணன்"—குளிர்ச்சி யுடையவன், குளிர்ந்த கிரணங்களை யுடையவனென்று பெயர்.

சந்திரனுடைய் சக்தி.

சந்திரனுடைய சக்தியைப்பற்றி பலர் பலவிதம் நினைக்கிறார்கள். 'தண்ணன் கதிர்வரவால் பொங்கும் கடல்' * என்றபடி அலைகளுக்குச் சந்திரன் காரணம். வைத்தியம் முதலிய மனோவியாதியும் சிற்சில தேகவியாதியும் பௌரணமையில் அதிகரிக்கின்றன. உலகத்தில் நடக்கிற தற்கொலைகளில் அனேகம் பௌரணமை பிரதமைகளில் தான் நடக்கிறதென்று கணக்கு பூர்வமாகத்தெரிகிறது. † தங்களைத் தாங்களே உயிர்மாய்த்துக் கொள்பவர்கள் அந்த தினங்களை நல்முகூர்த்தமாகத் தெரிந்தெடுக்க காரணம் யாதோ? சந்திரன் மனதிற்கு அதிஷ்டான தேவதை யென்பார்கள். சந்திரனுடைய இனிமையையும் அழகையும், குளிர்ச்சியையும், ஒளியையும் பார்க்கும்போது ஆஹா! நாம் சந்திரனில் பிறந்தோமா என்று எண்ண முண்டாகலாம். ஆனால் உண்மையில் சந்திரன் பூமிக்கு எவ்வளவோ தாழ்ந்தது.

‡ தங்குறை தீர்வுள்ளார் தளர்நதுபிறர்க்குறூஉம்
வெங்குறை தீர்க்கிற்பார் விழுமியோர்—திங்கள்
கறையிருளைநீக்கக் கருதா துலகில்
நிறையிருளைநீக்குமேனின்று.—

என்றபடி சந்திரன் தன்னுடைய குறையாகிய களங்கத்தை நீக்கிக் கொள்ளாமல் உலகத்து இருளை நீக்குவதுபோல் பெரியோர்கள் தங்கள் குறைகளைக் கூடப் பாராமல் பிறர் குறைகளை நோக்கிக் கவலைப் படுவார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் சந்திரனிடத்திலுள்ள குறைவு அதன் களங்கம் மாத்திரமல்ல. அங்கே முதலாவது நாம் சுவாசிக்கத்தக்ககாற்றுக் கிடையாது. அதன் காற்றை ஒரு க்ஷணம் நாம் சுவாசிக்குமுன்னமே தலை கிறுகிறுத்து மூச்சு அடைத்துத் தத்தளிக்கவேண்டும். 2-வது அங்கே ஒரு பொட்டு ஜலமாவது

* நன்னெறி. Shelley and Shakespeare use this simile very often, so also several others.

† Morselli's 'Suicide,' International Scientific Series.

‡ நன்னெறி.

கிடையாது. "சாந்த சமுத்திரம்" (The sea of serenity) எனப் பெயர்பெற்ற அநேக சமுத்திரங்கள் இருந்தாலும் அவைகள் போலி சமுத்திரமே தவிர வேறல்ல. அவைகளில் ஒரு துளி ஜலமும் கிடையாது. மேலும் பூமியில் இருப்பதுபோல் அடிக்கடி அடுத்தடுத்து இரவும் பகலும் வருவதில்லை. ஒரே தொடர்ச்சியாக 14-நாள் அல்லது 336 மணி தேசகாலம் பகலும் பிறகு அவ்வளவு நேரம் இரவும் உண்டாகும். சந்திரனிலும் இரவு பகலுக்குச் சூரியனே காரணம். பகலில் அதிக உஷ்ணமும் இரவில் அதிக குளிர்ச்சியும் உள்ளது. பகல் கழிந்து இரவு வரும்போது சூரியன் மறையும். ஆனால் சந்திரனில் அஸ்தமனம் பூமியில் உள்ளதுபோல் அலங்காரமாயிராது.

* "திசைமுகம்பசந்து செம்மலர்க்கண்கள்
முழுநீர்வாரமுழுமெயும் பனித்துத்
திரைநீர்ஆடை இருநிலமடந்தை
அரசுகெடுத்தலம் வருமல்லற்காலை."

என்றபடி 'பூமிதேவிதன்புருஷனை (சூரியனைக்) காணாமல் திசையாகிய தன் நான்குமுகமும் பசப்பூரப்பெற்றுப் புஷ்பங்களாகிய கண்கள் நீர் சொரிய சரீரமுழுதும் குளிர்ந்து வருத்தப்படும் அஸ்தமனவேளை, யென்று அலங்காரமாய்ச் சொன்னபடி வானமெல்லாம் நாலுபக்கமும் சிவந்து பார்த்தவர் உள்ளத்தை உருக்கத் தக்க அழகு வாய்ந்த அஸ்தமனம் சந்திரமண்டலத்தில் கிடையாது. சூரியன் களைத்தவன் போல் திடீரென்று சந்திரனிடமிருந்து விடை கூறப் பெற்றுக் கொள்ளாது மறைந்து போய் விடும். சந்திரனில் புல்பூண்டு கிடையா. பக்ஷி, மிருகம் கிடையா. மனிதன் என்ற பேச்சே கிடையாது. வீசி அடிக்கும் காற்றுக்கிடையாது. ஒருவர்க்கொருவர் பேசினால் கேளாது. ஆனால் பொன் முதலிய உலோகங்கள் ஏராளமாய் உண்டு. அங்கிருக்கும் மலைகள் சிவப்பு, மஞ்சள், நீலம் முதலிய பலவர்ணங்களாய் இருந்தாலும் பார்வைக்கு அதிக அருவருப்பாயிருக்கும்.

* சிலப்பதிகாரம்.

சந்திரனில் பகலில்கூட நக்ஷத்திரங்கள் புலப்படும். சூரியமண்டலத்திலுள்ள மலைகள் தெரியும். நம்முடையபூமி அங்கிருந்து பார்ப்பவர்களுக்கு 2-அல்லது 3 கஜகுறுக்களவுள்ள ஒரு கோளமாகத் தோன்றும். சந்திரனில் இரவாயிருக்கும்போது பூமிதான் அதற்கு முக்கிய ஒளியைத்தரும். ஆனால் அவ்வொளி நிலாவைப் போல் பிரகாசமாய் ஆனந்தமாயிராது.

நாம் தப்பித்தவறி சந்திர மண்டலத்துக்குப் போய்விட்டோமானால் இறகு கட்டினவர்களைப்போல் ஒரு மலையிலிருந்து மற்றொரு மலைக்குத் தாவலாம். பெரிய குன்றுகளைச் சுலபமாய் உருட்டலாம். அநேகமாயிரம் மயில்களை சொற்பநேரத்தில் சுற்றிவரலாம். நமக்கு அங்கே கீழேகால் பாவுகிறது வருத்தம்.* அங்கே மனிதர்கள் கீழே கால் ஊன்றி நடக்கவேண்டுமானால் நம்மைப்போல் 6 மடங்கு வளர்ச்சியுள்ளவர்களா யிருக்கவேண்டும்.

இம்மாதிரி ஜனங்களும் அவர்களுக்கேற்ற மற்ற ஜீவஜெந்துக்களும் சந்திரமண்டலத்தில் ஒரு காலத்தில் வசித்துக்கொண்டிருந்ததாகவும், சந்திரன் ஆதியில் தற்காலத்திலுள்ளபடி மயானக்கரைபோல் பாழாயிருக்கவில்லை யென்றும் பலர் தீர்மானிக்கிறார்கள். அநேக ஆயிரம் வருஷத்துக்கப்பால் பூமியும் இப்பொழுது சந்திரன் இருப்பதுபோல் உயிர்ப்பிராணிகளின் வாசத்துக்கு யோக்கியமில்லாமல் மாறிவிடுமென்று பயப்படுகிறவர்களும் உண்டு. ஆனால் இனிமேல் உண்டாகிற விஷயங்களைப்பற்றித் திட்டமாய்த் தீர்மானிப்பது கேவலம் மனிதர்களாகிய நமக்கு அசாத்தியமன்றோ. அளவற்ற அண்டங்களனைத்தையும் அமைத்துக் காத்து அழிப்பதைத் தமக்கு அநவரதமான ஓர் 'விளையாட்டாய்க்' †கொண்டுள்ள சாக்ஷாத் ஈசுவரனுடைய உட்கருத்தின் இரகசியத்தை அற்ப அறிவினராகிய நாம் அளக்கத் துணிவது 2,40,000 (2-லக்ஷத்து 40 ஆயிரம்) மயில்களுக்கு அப்பால் உள்ள சந்திரனை நமது 2-முழக் கைகளால் எழும்பி எட்டிப்பிடிக்க எத்தனித்தல் போலும்.

---

* இதற்குக்காரணம் சந்திரனுடைய காந்தசக்தி பூமியினுடையதைக் காட்டிலும் குறைந்ததாதலால் அதில் பொருள்களின் கனமும் குறைவு.

† கம்பர்.

## SOCIAL SERVICE INSTITUTE.

## சமஷ்டிஸேவை ஸாதனம்:

## வித்தை பயிலுமுறை.

## ஆயுள்வேத பாஸ்கரன்.

(முன் தொடர்ச்சி)

காலையுமாலையும் ஒவ்வோர் காதமாக வழி நடக்கையில் வழியில் ஒரு விறகு தலையன் எதிர்ப்பட்டான். அவ் விறகுதலையன் எலும்பு மூடிய உடம்பினனாய் இருப்பதைக்கண்டு "அடா விறகுதலைய! நீ இப்படி உடல் மெலிந்திருப்பதென்னை?" என்று கேட்க; அவன் "சாமி என்னவோ தெரியவில்லை. இந்தச் சுமையைத் தாங்கினதுமுதலாகக் கொஞ்சங் கொஞ்சமாய் இளைத்து வருகிறேன்.' என்று சொன்னான். அதன்மேல் ஜீவகன் இந்தவிறகு சுமையில் ஏதோ அதிசயமிருக்கின்றது என நினைத்து அதனை இருபது பணங்கொடுத்து வாங்கி அவிழ்த்துப் பார்த்தான். பார்த்தவளவிலே சுமையில் ஒரு வகை ஸ்படிகக்கல் இருக்கக் கண்டான். அதுவும் ஒருவன்மேல் வைக்கப் பட்டால் அவன் கொண்டுள்ள நோயின் குணங்களைத் தெற்றென விளக்குவ தொன்றாக இருக்கவே, அவ்விறகு தலையனுக்குப் பின்னும் பத்துப்பணங்கொடுத்து விட்டு அக் கல்லினைக் கைக்கொண்டு சென்றான்.

சிலநாள் வழிநடந்தபின் ஒருநாள் வழியிலே ஒரு அரிசிமண்டியிலே அளவுகாரன் ஒருவன் அளக்குந்தோறும் கையிலுள்ள படியினால் தலையில் சொரிந்து கொள்வதைக்கண்டு நெருங்கி, 'ஐயா! அதேன் அப்படி அடிக்கடி சொறிந்துகொள்வது?' என்று கேட்க, அளவுகாரனும், "என்னவோ அடியேன் சிலநாளாக என் தலையில் தீராத தினவெடுக்கின்றது' என்று கூறினான். உடனே ஜீவகன் விறகு சுமையில் கிடைத்த கல்லை அவன் தலையிலே வைத்துப் பார்த்தான். ஒரு பூரான் இருக்கக் கண்டான். கண்டசெய்தியை அளவுகாரனுக்குரைக்க, அவனும் "இவன்ஒரு மகா வைத்தியபண்டிதன் போலிருக்கிறது" என்று ஆலோசித்து, 'ஐயோ! இதற்கு ஒரு பரிகாரஞ் செய்தால் 'ஐந்நூறு பணங்கொடுக்கிறேன்" என்றான். அவனை ஒரு சாணக்குழியிலிருத்திக் காபல சிகித்ஸை செய்து பூரானை வெளிப்படுத்தினான். அளவுகாரனும் ஐந்நூறுபணத்தை எண்ணிக் கொடுத்தான். அதனை ஜீவகன் ஆசிரியர் ஆத்திரேயர்க்கு அஞ்சல்* வாயிலாய் அனுப்பிவிட்டான்.

அப்புறம் சிலநாழிகை நடந்தபின்பு வழியில் சிலர் ஒருவனைப் பாடைகட்டித் தூக்கிக் கொண்டு ஸ்மசானஞ் செல்வதைக் கண்டான். பாடையின்மேல் வளர்த்தியிருந்தவன் அரோக திடகாத்திரனாய்ப் பீமன்போல் இருப்பதைப் பார்த்து "இவன் யாதோர் நோயினாலும் இறந்தவனாகக் காணப்படவில்லை" என நிதானித்து சுமந்து செல்கின்றவர்களை நிறுத்தி, "ஐயா! இவன் யாவன்? எங்ஙன மிறந்தான்?' என வினவினான். அவர்களும் "என்ன ஐயா! மயானத்திற்குப் போகும்போது வழி மடக்கிக் கேட்கின்றீர்! இனி யாகவேண்டியதென்ன? போம்போம்" என்றார்கள். ஜீவகனும் பின்னும் பரிந்துகேட்க, அவர்களும் "ஐயா! இவன் பேர்போன ஒருமல்லகசெட்டி; இன்று காலையில் ஒருதடியனொடு மல்யுத்தம் செய்தான். விதிவசத்தால் வீழ்ந்துமூர்ச்சித்தான்" என்று சொல்லிக்கொண்டே சென்றார்கள். ஜீவகன் "ஆனால் சற்றுக்கீழே இறக்குங்கள் பார்ப்போம்" என்ன, அவர்களும் இதேது "காலைச் சுற்றின பாம்பு கடியாமற்போகாது" என்பதாய் இவன் நம்முடன் விடாமற் போராடுகிறான், வைத்தியரே என்னவோ தெரியவில்லை என்று நினைத்துச் சற்று இறக்கிவைத்தார்கள். ஜீவகன் தன் கையில் உள்ள கல்லை அம்மல்ல கஜெட்டியின் உடலில் வைத்துப் பார்க்க வயிற்றினுள்ளே குடல் புரண்டிருப்பதைக் கண்டு, அவன் வாயில் ஒரு மூங்கிற் குழலை வைத்து இதனுள்ளே ஒருவகைச் சூரணத்தைப் போட்டு ஊதினான். சூரணமும் உள்ளுறச்சென்று குடலைத் தீண்டின மாத்திரத்

*தபால்மூலமாய்

திலே குடலும் பழைய நிலைமையை அடைந்தது. அப்போது மல்லகஜெட்டி உறங்கிவிழித்தவன் போல் எழுந்திருந்தான். நடந்தஎல்லாவற்றையும் கேட்டறிந்த அந்த மல்லகசெட்டி ஜீவகனுக்கு நூறுவராகன் கொடுத்தான். ஜீவகன் அதனை முன்போலவே ஆத்திரேயர்க்கு அனுப்பிவிட்டான்.

அப்புறஞ் சென்று யமுனையாற்றங் கரையைச் சேர்ந்து ஒராலமரநிழலிலிருந்து இளைப்பாறிக்கொண்டிருந்தான். அப்போது ஆற்றில் நீரோடுகின்ற அழகைப் பார்த்திருக்கையில், ஆற்றுவெள்ளத்தில் ஒரு பிணம் மிதந்துவருவதைக்கண்டு எழுந்து பார்த்தான். பிணமும் சிரிப்பதாய்த்தோன்ற அவ்வதிசயத்தைநெருங்கிக் காண்போமென்று ஆராய்ந்து பார்க்கையில், பிணத்தின் குதிக்கால் நரம்பினை ஒரு மீனானது வாயிற்கவ்வி இழுத்துக்கொண்டிருந்தது. அது அங்ஙனம் இழுக்குந்தோறும் பிணமானது கண்திறப்பதும் மூடுவதுமாகச் சிரிக்கின்ற பாவனையாகக்காணப்பட்டது. அப்புறம் ஜீவகன் வழிநடக்கலாகி வேசாளியென்னும் பட்டணத்தை அடைந்தான். அங்குஒரு ஜெட்டியானவன் மற்போர் புரிகையில் கண்ணில் ஒரு குத்துண்டு கண்பிதுங்கிக் கனவருத்தமடைந்திருந்தான். அதுகண்ட ஜீவகன் இதற்கென்ன செய்யலாம், இதுமருந்தினாலாவதல்ல ஆயுதசிகிச்சை செய்வோமென்றால் 'கண்ணோ புண்ணோ! என்றபடி ஆயுத சிகிச்சையினாலும் எளிதில் ஆவதுமல்ல. இதனை உபாயத்தினால் தீர்ப்பதே திறமையாகும்' என்று யோசித்து, ஆற்றில்கண்ட அதிசயத்தை நினைவுகொண்டு, அந்த ஜெட்டியைப் படுக்கவைத்து ஆயுதமொன்றைக் கொண்டு. குதிக்காலின் நரம்பினைப்பற்றி வலித்தான். கண்ணும் கண்ணாயிற்று; ஜெட்டியும் தன்னாலியன்ற தனங் கொடுத்தான். ஜீவகுமாரன் அதனை அப்பதியில் வசிக்கின்ற, தன் சிற்றன்னைக்குக் கொடுத்தான்

வேசாளியில் வசிக்கும் குடியானவன் ஒருவன் தன்காதில் பூரான்கள் புத்திர பௌத்திர பாரம்பரியமாய்க் குடிகொண்டு குட்டிகள் பெருகி நெடுநாளாகப் படாதபாடுபட்டுக் கொண்டிருந்தான். இவன்ஜீவகனுடைய மருத்துவப் புலமையைப் பலர் சொல்லக்கேட்டு அவனிடம் சென்று "ஐயா! மருத்துவர் மன்னரே! என்னோயைத் தீர்த்தருளல் வேண்டும்" என்று வேண்டினான். ஜீவகன் "இதுவரையில் குரு உபதேசத்தின்படியே சிகித்சை செய்து வந்தேன்: இனி என் அறிவினுக்குத் தோன்றுந் தோன்றுமாறு சூக்ஷுமப் பிரயோகங்களைச் செய்வேன்' என்று எண்ணி, நோய் கொண்டவனை நோக்கி "அப்பா! தழைவேய்ந்த ஒரு குடிசைகட்டி அதனுள்ளே நீலநிறக் கம்பளம் ஒன்றை விரித்து வை. அதனடியில் ஒரு மத்தளத்தையும் தேடிவந்துவைக்கவேண்டும், குடிசையின் அடித்தரையைச் சூடேற்றி வைக்கவும் வேண்டும். நாளைப் பத்து நாழிகைக்கு மேல் நான் வருவேன்" என்று சொல்லியனுப்பினான். குடியானவனும் வைத்தியன் சொன்னபடியே எல்லாவற்றையுஞ் சித்தஞ் செய்து வைத்தான். ஜீவகனும் அக்குடிசையை அணுகி நோவாளியைப் படுக்கவைத்துத் தரையில் தண்ணீர் தெளித்து மத்தளத்தை முழக்கினான். உடனே பெரிய பூரானானது இதுதான் இளவேனிற்காலமென்று செவியினின்றும் வெளிப்பட்டது. அதுகண்ட ஜீவகன் சிறிது இறைச்சியைச் செவிவாயில் வைத்தான். அதுகண்டபூரான் மீண்டும் உள்ளூறச் சென்று குஞ்சுகுட்டிகள் யாவற்றுடனே புறப்பட்டுவந்து இறைச்சியில் மொய்த்துக் கொள்ள, உடனே ஜீவகன் அவற்றையெல்லாம் ஒருசட்டியில் தள்ளிவிட்டான். குடியானவனும் அதனோடுஉபத்திரவமொழியப்பெற்று உற்சாகங்கொண்டு ஐந்நூறு காசுபணங் கொடுத்தான். ஜீவகன் இப்பணத்தையும் சிற்றன்னைக்குக் கொடுத்துவிட்டான்.

அப்பால் அங்குநின்றும் போய் இராஜக்கிருகமே சென்றடைந்து தந்தைதாய் தமயன்மார்

களுடனே அளவளாவியிருந்தான். இருக்கும், போது ஒருநாள் ஏழைப்பார்ப்பான் ஒருவன் கஷ்ட சாத்தியமான கண்ணோயுடன் ஜீவக னிடஞ்சென்று தனக்கு ஒருபரிகாரஞ் சொல் லும்படி வேண்டினன். ஜீவகன் அதிக கோ பத்துடன் "சாம்பலை அள்ளிக் கண்ணிலே கொட்டிக்கொள் போ! போ!" என்று சொல் லியனுப்பினன். கபடறியாத அந்தப்பார்ப்பான் அப்படியே செய்தான். நேத்திர உபத்திரவ மும் நீங்கிவிட்டது.

ஜீவகன் இங்ஙனமாக விந்தை விந்தையான செய்கைகளைச் செய்து வருகையில், அரசனு கிற பிம்பிசாரன் தலையில் ஒரு கட்டிபுறப்பட் டது. அரசனும் ஆயுள்வேதியர்களை யழைத்து "மருத்துவத் தலைவீர்! என் சிரசில் புறப்படு கின்ற பருவினைக்காண்மின்; இதற்குச் சிகிச் சை செய்மின்." எனக்கூறினன். அம்மருத் துவ நிபுணர்கள் "மருத்துவப்புலமை சான்ற ஆசிரியர் அகத்தியனாரும் திருப்பாற்கடலில் திருவுடன் தோன்றிய பகவான் தந்வந்திரியும் கண்டு அழுக்காறடையத்தக்க ஆயுள்வேதியர் பெருமானுகின்ற ஜீவககுமாரபந்தன் அங் கிருக்க அடியோங்களை அழைத்த காரண மென்ன? அவனைச் சிறுபிள்ளையென்றுஇகழ்ந் தீரோ! அவன் சூரியன்; அகத்தியராதியோர் சந்திரர்; அடியோங்களும் எம்போலியரும் நக்ஷத்திரங்கள்; அவனைச் சாமானியனுக எண் ணுதீர். தங்கட்குச் சிகிச்சை செய்யத்தக்க வன் அவனே எனக் கூறிப்போயினர். அப் புறம் அரசன் "தம்மிற்றம் மக்களறிவுடமை மாநிலத்து மன்னுயிர்க்கெல்லா மினிது" என் பதை நினைத்து ஆநந்தித்து ஜீவகனை அழைத் துத் தன்நோயைத் தீர்க்கவேண்டினன்.

ஜீவககுமாரன் அரசனுகிய தன் தந்தையை நோக்கி "இந்தக்கட்டியை ஒருநொடிப்பொழு தில் கண்டித்துவிடுகிறேன், வாருங்கள். நானே என் கையால் உங்களுக்குத் தலைமுழுக்காட்ட வேண்டும்" என்று சொல்லி, அரசனை மஞ்சன சாலையில் ஒரு பீடத்தின் மேலிருக்கச் செய்து கட்டியைப் பழுக்கச்செய்யும் கடுக்காய் முத லிய தைலத்தைத் தடவி, அதன் மேல் ஐந் நூறுகுடந் தண்ணீர் வார்த்தான். அந்தத் தண்ணீரிலும் சில ஔஷதிசாரங்களை ஏற்றி வைத்திருந்தான். இங்ஙனமாகக் குடங்குட மாய்த் தண்ணீரைச் சொரியா நிற்கையில், கட்டியானது பழுத்து விட்டதை யறிந்து ஒருவருக்குந் தெரியாதபடி, ஒரு சூரியெடுத் துச் சத்திரஞ்செய்து, சீயைப்பிதுக்கி, மீண் டும் முன்போலவே ஐந்நூறுகுடந் தண்ணீ ரைக் கொட்டினன். சத்திரஞ்செய்த வாயும் மூடிக்கொண்டு ஐந்நூறுகுடந் தண்ணீரையும் வார்ப்பதற்குள்ளாகச் சதைவளர்ந்து மயிரும் முளைத்துவிட்டது. அரசன் இதையெல்லாம் அறிந்தவனல்ல, தலைமுழுக்காட்டியாயிற்றே; இனிமேல்தான் சிகிச்சை நடக்கப்போகிற தென்றெண்ணிக் கொண்டிருந்தான். உடனே ஜீவகன் தகப்பனை உண்ணவேண்டினன். அரச னும் உண்டிசெய்தான் பின்பு ஜீவகனைநோக்கி "இனி நீ செய்யவேண்டிய சிகிச்சை செய்ய லாமே" என்றான். ஜீவகனும் "செய்யவேண் டிய சிகிச்சை யெல்லாம் செய்தாயிற்றே; இன் னும் செய்யவேண்டுவ தொன்றுமில்லையே" என்றான். அது கேட்ட அரசன் ஆச்சரிய மடைந்து அந்தவார்த்தையை நம்பாதவனாய்க் கட்டி கண்டிருந்த இடத்தைக் கையினால் பல முறை தடவிப்பார்த்தான். ஒன்றுங் கைப்பட வில்லை. பின்னும் நம்பிக்கையற்றவனாய் நிலைக் கண்ணாடியில் தலையைப் பலமுறை திருப்பித் திருப்பிப்பார்த்தான். கட்டியிருந்த இடம் மயிர்முளைத்துக் கிடக்கக் கண்டான். அப்படி யும் மனம் நிலைகொள்ளாமல் மனைவி முதலான மற்றவர்களை அழைத்துக் காட்டினன். அவர் களும் கட்டியிருந்தவிடத்தில் மயிரும் முளைத் துப் பழையபடி இருக்கக்கண்டுஅதிசயித்தார் கள். மந்திரிமார்களும் மன்னனைச் சூழ்ந்து கொண்டு "ஐயா மன்னவர் மன்னனே!

தந்தைமகற்காற்றுநன்றி அவையத்து
முந்தியிருப்பச் செயல்,"

என்னுங் கடமையைக் கடைபோகக்கழித்தீர். இவனும்

"மகன் தந்தைகாற்றுமுதவி இவன்தந்தை
என்னோற்றான் கொலென்னுஞ்சொல்."

என்பதற்கு எடுத்துக்காட்டாய் ஆயுள் வேத சாகரத்தை ஆழங்கண்ட அரிய புலவனாயினன்'' என்று சொல்லி மனமகிழ்ந்தார்கள். அரசனும் பின்னர் ஆநந்தங் கொண்டவனாகி "இனி இவனுக்கு ஆயுள்வேதபாஸ்கரன் எனப் பட்டஞ் சூட்டுங்கள்'' என்று சொன்னான்.

அப்போது அந்தகன் ஒருவன் அங்குற்று, "ஓ மன்னவர் பிரானே! மந்திரிமார்களே! ஜீவககுமாரன் எனக்குக் கண்தெரியப் படுத்தினானன்றோ அவனுக்கு ஆயுள்வேதபாஸ்கரன் என்னும் பட்டம் தக்கதாகும்? இல்லாவிட்டால் நீங்கள் அவன்மீதுள்ள அன்பினால் அப்பட்டங் கட்டினீர் என்னுங் குறைமொழி கூறக் காரணமுண்டாகுமே'' என்றுகூறினன். கூறக் கேட்ட ஜீவகன், "நானே உன்னை முன்பின் ஒருபோதும்அறியாதிருக்க, உன்னுடையதீர்க்கவில்லை யென்று சொல்லுகிறாயே'' என்று கேட்க, அவ்வந்தகன், ஐயாஐயா முன்னேஒரு பார்ப்பானுக்கு ஒரு வைத்தியஞ் சொன்னீர்களே, அப்படியே செய்தேன். இன்னும் கண் தெரியவில்லையே'' என்று சொன்னான். ஜீவகனும் கண்ணோயென்பதெல்லாம் ஒன்றுதானா அவற்றுக்கெல்லாம் மருந்தும் ஒன்றுதானோ? கண்ணோயில்எத்தனையோவிதமான பேதங்களிருக்கின்றன? அதைஇன்னின்னதென வறிந்து அதற்குத் தக்கபடி சிகித்சை செய்யவேண்டாமா: உன் கண்ணின் நோய்ஒன்று. அந்தப் பிராமணன் கண்ணின் நோய் வேறொன்று. ஆகவே உனக்கு வேறுவகைப்பட்ட சிகிச்சை செய்தல் வேண்டும்'' எனக் கூறி, அவனுக்கு அங்கனஞ் செய்தான். அவனும் நோய்தீர்ந்து "இந்தப்புண்ணியவானுக்கே தகும் 'ஆயுள் வேத பாஸ்கரன்' என்கிற பட்டம். இனித் தடையில்லை, உடனேகட்டுங்கோள்'' என்றான் உடனே ஜீவககுமாரபந்தனை ஓர் யானையின் மீதிருத்தி ஊர்வலம் வரச்செய்து ஆயுள்வேத பாஸ்கரன் என விருதிதிப் பட்டங் கட்டினார்கள். இது நிற்க.

---

## "MY BABY IS MY WORLD"

### "I wouldn't sell him for all the money the world contains."

### "உலகெல்லாம் குழந்தையில்."

குழந்தைகளே! கடவுளை வரகவி யொருவர் "உலகெலா முணர்ந்து ஓதற்கு அரியவன்'' என்று பாடியுள்ளார். அப்படி உலகத்தினரெல்லாம் உணர்ந்து சொல்வதற்கு அருமையான கடவுள் (எல்லாம் கடந்து உள்ளவர் 'கடவுள்') குழந்தை ரூபமாயிருக்கிறார் என்று நமது புராணங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. அந்தக் குழந்தை க்ஷீராப்தியில் (பாற்கடலில்) ஆலிலைமேற் பள்ளிகொண்டிருக்கிறார் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. நமது முன்னோர்கள் குழந்தைகளும் மனதிற்கொள்ளும்படி பாற்கடல் என்று சொன்னதையே "Magnetic field of consciousness'' என்று சொன்னால் அது சாஸ்திர ஞானம் என்று நம்மவர்கள் புகழ்கிறார்கள். "ப்ரஜ்ஞானம்ப்ரஹ்மம்'' என்று மஹாவாக்கியமோதினால் அது வேதாந்த மென்று இகழ்கிறார்கள். பாற்கடல் என்றால் புராணமென்றும் கட்டுக்கதை யென்றும் பழிக்கிறார்கள். ஐயோ! நம்மவர்கள் கதி இப்படி யாயிற்றே! யென்று பரிதாபமாயிருக்கிறது. பாற்கடல் என்றால் அளவற்ற அன்பு என்று சொன்னால் அது கூடார்த்தம் என்று குதிக்கிறார்கள்.

யுனைடெட் ஸ்டேட்ஸ் வாஷிங்டன் பட்டணத்தில் ஏழைகள் குழந்தைகளை வளர்ப்பதற்கான தர்ம ஸ்தாபனமொன்று ஏற்பட்டு வேலை செய்து வருகிறது. அந்த ஸ்தாபனகர்த்தர்களுக்குத் தாய்மார்களைக் கோடைகாலத்துக்கு குளிர்ந்த விடத்திற் கனுப்பப் பணம் வேண்டியிருந்தது. அந்த ஸ்தாபனத் தலை

வரான பெருமாட்டி ஒரு யுக்தி செய்தாள். அது என்னவென்றால்: தங்களுடைய ஸ்தாபனத்தில் வளர்ந்த குழந்தைகளையெல்லாம் சந்தையில் கண்காட்சி காட்டுவது போல், கண்காட்சியாக ஜனங்களுக்குக் காட்ட ஏற்பாடு செய்து அதில் சேரும் பணத்தைக் கொண்டு தாய்மார்களை குளிர்ந்த இடத்துக்கு அனுப்ப பிரயத்தனித்தார்கள்.

அந்தக் குழந்தைகள் கண்காட்சிசாலை வெகு ரம்மியமாயிருந்தது. இங்குமங்கும் குழந்தைகள் அழகாக விளங்கிக் கொண்டிருந்தன. மூன்று வாரமான குழந்தை முதல் நாலு வயசுக் குழந்தை வரையில் அக்கண்காட்சி ஸ்தலத்தில் பார்த்தோர் கண்களைக் களிக்கச்செய்து கொண்டிருந்தன.

அங்கே பார்க்க வந்தவர்களில் கோடீசுவரன் ஒருவர் இருந்தார். அவர் அக்குழந்தைகளிலெல்லாம் மேலானதாக வெகுமதி யளிக்கப்பெற்ற நாலுவயசுக்குழவியைப் பார்த்தார். அவருக்கு மனம் அக்குழந்தையிடத்திற் போய்விட்டது. பணக்காரனுதலால் பணத்தாலாகாத காரியம் ஒன்றுமில்லை யென்கிற மமதைகொண்டவர். அவர் தன்மனம்அக்குழந்தையிடத்துப் பற்றவே அக்குழந்தையைத் தன்னதாக ஸ்வீகரிக்க வேண்டுமென்று தீர்மானித்தார். உடனே அந்த ஸ்தாபனத்தலைவரான பெருமாட்டியிடம் சென்று அந்த நாலு வயதுச் சிறுவனை எனக்கு ஸ்வீகாரமாகச் செய்து கொடுத்தால் உமது ஸ்தாபனத்துக்கு லக்ஷம் பொன் தருகிறேன் என்று சொன்னார். ஸம்மதமானால் உடனே வேண்டிய ஏற்பாடு செய்ய எனது 'லாயரை' வரவழைக்கிறேன் என்றார். அதற்கு அப்பெருமாட்டி லக்ஷம் பொன்னிருந்தால் எங்களுடைய ஸ்தாபனத்துக்கு அது எவ்வளவோ உபகாரமாயிருக்கும். ஆனால் நாங்கள் குழந்தைகளை வளர்க்கச் சொல்லித்தருகிறோமே யன்றி விற்கச் சொல்லித்தருவதில்லையே என்று விசனித்தார்.

அந்தச் சிறு பையனுடைய தாயார் ஒரு வேலைக்காரி. அவளைக்கூப்பிட்டு "உன் குழந்தையைக் கொடுத்தால் லக்ஷம் பொன் நமது தர்ம ஸ்தாபனத்துக்குக் கொடுப்பதன்றி உனக்கும் ஏராளமான திரவியமளித்து உன் தரித்திரத்தை ஹதம் செய்து விடுவார். உன்னிஷ்டம் எப்படி?" என்று கேட்டார்.

அதற்கு அந்த வேலைக்காரி கொஞ்சம் கூட யோஜியாமல் "என் குழந்தையே எனக்கு எல்லா உலகமும், இந்த உலகத்திலுள்ள பணமெல்லாம் என்னதாகக் கொடுத்தாலும் என் குழந்தையைக் கொடுக்க மாட்டேன்!" என்று உறுதியாகச் சொன்னாள்.

அரிச்சந்திரனைப் பொய் சொல்லச் செய்வதாக சபதம் செய்து கொண்டு "மதியிழந்து தன் வாயுமிழந்த மாதவன்" (விசுவாமித்திர ரிஷியின்) கதியாக அந்தக்கோடீசுவரன் பணச்செருக்கு இழந்து தன்பணமெல்லாவற்றினும் தான் அநுபவிக்கும் திருப்தியைவிட அந்த உண்மைத்தாய் சாப்பிடச் சோறில்லாமல் உழைத்தாலும் அவள் குழந்தை முகம் பார்த்துக் கோடி கவலை தீர்ந்து சந்தோஷமாயிருக்கிறதை யுணர்ந்து பணத்துக்கெட்டாத பொருளும் இவ்வுலகிலிருக்கிறதென்று உணர்ந்து சென்றான்.

"தாயன்பு தானே தேவனருள்" என்பர். அந்தத் தேவனருள் பெற்று திவ்யப்பிரஸாதமாகப் பெற்ற குழந்தையை வளர்ப்பதிலும் பெரிய வித்தை வேறுண்டோ! இல்லையாதலால் தான் "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்று செப்பியுள்ளார்.

---

### The Vivekachintamani.

"This favourite Children's Magazine, for May, contains excellent reading for the young people, and there is no doubt that it is admirably conducted. We note among other tributes to the excellence and the success of the *Vivekachintamani*, - - - - - -

"The School Children are very eager over the *Vivekachintamani*, it is their favourite magazine." "It is not only the children who like the *Vivekachintamani*, it is the teachers too; they often get useful hints from it." *Madras Times*.

## SHORT STORY : "SPADE OF ACE"

## "இஸ்பேட் ஏஸ்"

அல்லது

## தன்வினை தன்னைசுடும்.

I. வரவும் வரலாறும்.

மைலாப்பூர் கோபாலன் தம்மிடம் கொடுக்கப்பட்ட விஸிடிங் கார்டைப்(Visiting card) பார்த்துவிட்டு என்னிடம் தந்தார். அக்கார்டின் மேல் அச்சிடப்பட்டிருந்த பெயராவது.—

"சென்ன கேசவலு நாயுடு"

"அவரை உள்ளே அழைத்துவா" என்று என் சிநேகிதர் சொன்னார். ஒரு நிமிஷநேரஞ் சென்றதும் சென்னகேசவலு நாயுடு அறையினுள்ளே வந்து அங்கிடப்பட்டிருந்த ஓர் நாற்காலியின்மேலுட்கார்ந்தார்.

அவர் உயரமாகவும், அழகாகவும், திடகாத்திரராகவுமிருந்தார். அவருக்கு உத்தேசம் 22 வயதிருக்கும். அவர் தம் உடையால் பிரபுவெனத் தோன்றினர். கல்வியில் தேர்ச்சியுடையவராகவும் தீவிர புத்தியுள்ளவராகவும் காணப்பட்டார்.

அவர் மொழிந்த விநோதமான செய்தியை இவ்விடம் தெரிவிக்கிறேன்:

சென்னகேசவலு:—நான் என் காலத்தையெல்லாம் சிங்கப்பூரில் கழித்தேன். சுமார் மூன்று வருடங்களுக்குமுன் அங்கே ஒரு சீட்டாட்ட சங்கத்திற் சேர்ந்திருந்தேன். அது மெத்த பிரத்யேகமும் இரகஸ்யமுமானது. என்னைத்தவிர மற்றெல்லோரும் பணத்தை நீர்போற் செலவிட அதிற் சேர்ந்தார்களென எனக்குப்பட்டது.

சூதாட்டத்திலும் சட்டமா? பேஷ்!

சங்கத்தினர் யாவரும் முறை பிறழாது ஆடுவதாகத் தெரிந்தது. ஆட்டம் சரியானபடி நடைபெறுவதற்கான விதிகள் யாவையும் வெகு நிர்ணயமாய் அனுசரித்து வந்தார்கள். சங்கத்திற் சேர்ந்தவர் எவரேனும் அஜாக்ரதையாய் ஏதாவது பிழைகள் செய்தபோதும் அதை வெகு மும்முரமாய்க் கண்டித்தும் பிழை செய்த நபருக்குப் பெருந்தொகை அபராதம் விதித்தும் வந்ததால் சீட்டாட்ட சட்டத்துக்கு விரோதமானதெதையும் நாங்கள் செய்வதுமில்லை, மனதினால் நினைப்பது மில்லை. ஏதாவது சிறிது சந்தேகமேற்பட்டாலும் அதை அதிக ஜாக்ரதையாய் ஆராய்வோம்,

பலநாள் திருடன் ஒருநாள் பிடிபடுவான்.

எம்மவரில் இராமலிங்க மென்பவன் மெத்த அதிஷ்டசாலியாகவும் ஆட்டத்தில் நிபுணனாகவுமிருந்தான். அவனுக்கு சீட்டாட்டம் தவிர வேறொரு வேலையுங் கிடையாது. அவ்வாட்டத்தில் இரவில் சம்பாதிக்கும் பொருளைக் கொண்டே ஜீவனம் செய்துவந்தான். நான் அவனுடன் பிரத்யேகமாய் பலதடவைகளில் ஆட்டம் ஆடியிருந்தேன். ஒவ்வொரு விசையும் அவனே ஜெயமடைந்து வந்ததால் ஏதாவது சூது செய்கிறானென்று வெகு ஊக்கமாய் கவனித்து வந்ததில் கடைசியாய் அவன் வாஸ்தவமாகவே சூது செய்து வந்தானென்றும், அதனால் தான் அவன் ஒரு விசையும் தோல்வியடையாமல் சதா ஜெயமடைந்து வந்தானென்றும் நான் சந்தேகித்தேன்.

இச்சந்தேகத்தை நிச்சயப்படுத்திக் கொள்ளுவதற்காக ஒரு நாள் நான் இராமலிங்கத்துடன் ஆடித்தோற்ற சீட்டுக்கட்டையே வீட்டுக்கு எடுத்துச் சென்றேன். சீட்டுகளை நான் மேஜையின் மேல் பரப்பி வெகு ஜாக்கிரதையாய் பரிசோதிக்க ஆரம்பித்தேன். வெகு நேரஞ்சென்று சில சீட்டுகளின் பின்னால் அடையாளங்கள் செய்யப்பட்டிருந்ததைக் கண்டு அவைகளை இராமலிங்கம் செய்திருப்பானே என்று யோசித்தேன். ஆனால் அப்படியில்லை. சீட்டுக்கட்டுகள் செய்பவர்களே அவ்வடையாளங்களைச் செய்திருந்தார்கள்!

இவ்வபூர்வ விஷயத்தைக்கொண்டு இராமலிங்கத்தின் சூதை வெளியாக்கவெண்ணி, ஓர் நாள் அவன் ஸ்பேட் ஏஸை ஆடியபோது அச்சீட்டை நான் பற்றியெடுத்து என் சிநேகிதர்களை நோக்கி,

"பிரபுக்களே! இச்சீட்டுகளெல்லாம் அடையாளம் செய்யப்பட்டிருக்கின்றன. இராமலிங்கம் சூதாக ஆடுகிறானென அவர் மீது குற்றஞ் சாட்டுகிறேன்". என்று நிதானமாய்ச் சொன்னேன்.

இதைக்கேட்ட என் சிநேகிதர்கள் யாவரும் அதிக ஆச்சர்யமும் கோபமுமடைந்தனர்

அவர்களின் பரபரப்பை நான் என்னென்று சொல்லுவேன்! இராமலிங்கத்தை மனங் கொண்டவரையில் தூஷிக்க ஆரம்பித்தனர். அவன் தன் குற்றத்தைத் மறுத்தான். நான் காரணங்கள் மேல் காரணங்கள் எடுத்துக்காட்டி, அவன் குற்றத்தைப் பூராவும் ருசுப்படுத்தியதால் ஏதும் பதிலுரைக்க வழியின்றி, அடங்காத வெறிகொண்டு தன் சட்டைப்பையினின்றும் ஓர் கைத் துப்பாக்கியை யெடுத்து எனக்கு நேரே நீட்டினுன். என்னைச் சூழ்ந்திருந்தவர்களும் தங்கள் துப்பாக்கிகளை எடுத்து அவனைச் சுடுவதாய் பயமுறுத்தியதால் நான் தப்பினேன்.

"உள்ளதைச் சொன்னல் நொள்ளை கண்ணணுக்கு நோப்பாளம் தான்:" ஆனல் என்ன செய்கிறது!

சபதம்.

நான் வெளிப்படுத்திய விஷயத்தால் தன் ஜீவனமுறை அழிந்ததெனக் கண்ட இராமலிங்கம் என்னைப் பார்த்து,

"அடே சென்னகேசவனு!" என் மேஜை மீதிருந்த 'ஸ்பேட் ஏஸ்' சீட்டைக் கையிலெடுத்துக் காட்டிக்கொண்டே, "இப்போது தப்பித்துக் கொண்டோம் என அகங்காரம் கொள்ளாதே! நீ பெரு மகிழ்வு அடையப் போகுங் காலத்தில் உன்னை மாளாத் துன்பத்துக்குள்ளாக்குவேன். அது நிச்சயம்: அப்போது உனக்கு முன்னெச் சரிக்கைக்காக இந்த ஸ்பேட் ஏஸையே அனுப்புவேன்," என்று சபதம் கூறினுன்.

இராமலிங்கம் ஓர் முரடன். தான் சொன்னபடியே என்னை வஞ்சித்து துன்பத்துக்குள்ளாக்குவானென எனக்குள் நிச்சய மேற்பட்டது.

"..........அஞ்சுவது அஞ்சல் அறிவார் தொழில்."

என்ற சான்ருேர் வாக்கின்படியே பயப்பட வேண்டிய விஷயத்தில் பயப்படுவது அறிவாளிகளின் செயலாதலால், நான் இராமலிங்கம் தெரிவித்த சொற்களால் அச்சமுற்று கோழைமனத்தனல்லாமற் போனுலும் வீணில் விபத்தை வருவித்துக்கொள்ள இஷ்டமுருமல் உடனே சிங்கப்பூரைவிட்டு இவ்விடம் வந்து சேர்ந்தேன். இங்கு வந்தபின் இராமலிங்கத்தையும் அவன் பயமுறுத்தியதையும் வெகுவாய் மறந்திருந்தேன்.

இன்றைக்கு 6 மாதமுன் எனக்கும் என் தமக்கையின் குமாரத்தி ஸ்வர்ணும்பாளுக்கும் விவாஹ நிச்சயார்த்தமாயிற்று. என் தமக்கை முன்னமேயே காலஞ்சென்ருள். என் அத்தான் நிச்சயார்த்தத்துக்குப்பின் சடுதியில் மாரடைப்பால் இறந்தார். அவர் இறக்குந் தருவாயில் தம்முடைய தம்பியாகிய ஸ்ரீராமுலு நாயுடுவை ஸ்வர்ணும்பாளுக்கு கார்டியனுக்கி சகல சொத்துக்களுக்கும் அவரையே காரியஸ்தராக நியமித்து ஸ்வர்ணும்பாளை எனக்கே விவாஹம் செய்து வைக்கும்படி ஏற்படுத்திவிட்டுப் போனுர். இப்போதும் அவள் தன் சிற்றப்பனின் அநுசரணையின் கீழ் தான் இருந்து வருகிருள்.

இராமலிங்கம் பயமுறுத்தியதையும் அதனுல் நான் சடுதியில் சிங்கப்பூரைவிட்டு வந்ததையும் ஸ்வர்ணும்பாளுக்கும் ஸ்ரீராமுலுநாயுடுவுக்கும் மட்டுமே நான் தெரிவித்திருந்தேன்.

ஸ்வர்ணும்பாளுக்கும் எனக்கும் விவாஹம் நடைபெறுவதைப்பற்றி என் சிறிய அத்தான் அவ்வளவாய் பிரியம் காட்டவில்லை. சாக்குப் போக்குகள் சொல்லி விவாஹத்தை காலஹரணம் செய்துகொண்டு வந்தார். எனக்குத் திரண்ட சொத்தும், யெளவனமும், தேகதிடமுமிருந்தும், ஸ்வர்ணும்பாளுக்கும் என்னை மணக்க இஷ்டமிருந்தும், அவர் எங்கள் விவாஹத்துக்கு ஏன் உடன்படவில்லையோ எனக்கு விளங்கவில்லை? எப்படியும் இன்னும் இரண்டு வாரத்தில் விவாஹத்தைப் பூர்த்தி செய்வதென நிச்சயித்திருக்கிருேம்.

சந்தேகாஸ்பதம்

இது நிற்க. இன்று காலையில் எனக்கு ஓர் கவர் வந்தது. அதனுள் 'ஸ்பேட் ஏஸ்' சீட்டு ஒன்றிருந்தது. ஸ்பேட் ஏஸ் அடங்கிய கவர் எனக்கு யார் அனுப்பியிருக்கக்கூடும்? நான் சந்தோஷமடையப்போகுங் காலத்தில் எனக்

குத் துன்பம் விளைவிக்குமாறு முதலில் எச்சரிக்கையாக 'ஸ்பேட் ஏஸ்' சீட்டை அனுப்பி வைப்பதாக இராமலிங்கம் சொன்னபடியே நானும் விவாகம் செய்து கொண்டு சந்தோஷமாயிருக்கப்போவதால் எனக்குத் துன்பம் விளைவிக்கவே இராமலிங்கம் தான் ஸ்பேட்ஏஸ் அனுப்பியிருக்கிறனென எனக்கு நிச்சயமாய்த் தெரிகிறது. கவரின் மேல் மதறாஸ் என்கிற முத்திரை இருப்பதால் அவன் இப்போது சென்னையி லிருக்கிறரென நினைக்கிறேன். என்று முடித்தார்.

பிறகு சென்னகேசவலு நாயுடு தன் சட்டைப்பையினின்று ஒரு கவரை எடுத்து கோபாலன் கையில் கொடுக்கவும் அதிலிருந்த ஸ்பேட் ஏஸைப் பார்த்துவிட்டு அவர் அதைத் தன்னிடமே வைத்துக் கொண்டார்.

ஆராய்ச்சி

கோபாலன்: இராமலிங்கத்தின் அடையாளமென்ன?

சென்னகேசவலு: அவன் சிறிது குட்டையானவன். புஷ்டியாயிருப்பான். முகம் சப்பையாக விருக்கும். தலைமயிரை நீளமாய் வளரவிட்டிருப்பான். குனிந்த வண்ணமாய் நடப்பான். வெண்மை உடை தரிப்பதில் மெத்த பிரியங்கொண்டவன். சீட்டாட்டத்தில் சம்பாதித்ததை வைத்துக்கொண்டு செலவழித்து வருகிறனென நினைக்கிறேன்.

கோபாலன்: ஆம் அப்படியிருக்கலாம். அவன் உன்னை இங்கு தொடர்ந்து வந்திருக்கலாம். அவனுடைய கடிதம் உனக்குக் கிடைத்ததும் நீ எங்காவது போய்விடுவாயென அவன் உனக்காக காத்துக்கொண்டு மிருப்பான். நீ எங்கே வசிக்கிறய்?

சென்னகேசவலு: தங்கசாலை மேற்கோடி 36-நெம்பர் வீடு.

கோபாலன்: அப்படியாயின் நீங்கள் ஒரு கோச்சுவண்டியில் போங்கள். நாங்கள் ஒரு வண்டியிலேறிக்கொண்டு உங்கள் பின்னலேயே சிறிது தூலவில் வருகிறேம். இராமலிங்கம் உங்களைத் தொடர்ந்துவந்தால் அவன் சங்கதிகளைப்பற்றி நாங்கள் ஏதாவது அறிகிறேம். அவன் போக்குவரவை நீங்கள் கண்டுகொள்ளாதேயும். நாங்கள் பின்பக்கமாக வந்து தெருவின் கோடியில் கலந்துகொள்கிறேம். ஆகையால் நீங்கள் தெருப்பக்கமாகப்போங்கள்.

அவ்விதமே, சென்னகேசவலு நாயுடுவின் வண்டி முன்னும் எங்கள் வண்டி பின்னுமாக நூறு கெஜதூரம் போவதற்குள், ஓர் ஊதா வர்ணம் கொடுக்கப்பட்டிருந்த மோடார் வண்டி எங்களைக் கடந்து, நாயுடு அவர்களின் வண்டியைத் தொடர்ந்தது. குள்ளமும் புஷ்டியுமான ஒருவர் வெண்மை உடைதரித்து அதில் உட்கார்ந்திருந்தார்.

கோபாலன் திருப்தியுடன் புன் முறுவலுற்றார்.

கோ:—இராமலிங்கம் தன்னுடைய விரோதியை ஒரு சிறிதும் மறைவிடமாட்டான் போலிருக்கிறது. தான் தொடரப்படுவதை கவனியாமலேயே வேறெருவரை அவன் தொடர்ந்து செல்லுகிறன்.

இங்ஙனம் முன்னும் பின்னுமாய் செல்லும்போது ஸென்ட்ரல் ஸ்டேஷனண்டை ஜனநெருக்கத்தால் வண்டிகள் சிறிது நேரம் நின்றன. சென்னகேசவலு வண்டியும் இராமலிங்கத்தின் மோடார் வண்டியும் ஒன்றின் பக்கத்தில் ஒன்றய் நின்றன. எங்களுடையது பின்னல் நின்றது.

மறுபடியும் நாங்கள் வண்டியை யோட்டினபோது இராமலிங்கத்தின் வண்டி சென்னகேசவலு வண்டியைத் தொடருவதை யொழித்து நேராக கோட்டைப் பக்கமாய்ப் போயிற்று. சென்னகேசவலுவின் வண்டி அவர் வீட்டை நோக்கிச் சென்றது. கோபாலன் மோடார் வண்டியைத் தொடர்ந்து செல்லும்படி வண்டிக்காரனிடம் சொன்னர்.

## SOCIAL SERVICE INSTITUTE.

(PRELIMINARY REPORT.)

20th June, 1914.

### THE CHILDREN'S DAY FESTIVAL, 1914. CELEBRATIONS AT HOME.

## ஸமஷ்டி சேவை ஸாதனம்.

### பாலர் திருவிழாக் கொண்டாட்டம்: அஹத்தில் உற்சவம் கொண்டாடும் ஆனந்த வைபவம்.

---

ஸரஸ்வதி தேவியார் துதி.

"அயனுர் அணியே அறிவார் அறிவே
பயனும் ஒளியே பதுமாஸனியே!"
ஸரஸ்வதி தேவிக்கு ஜய ஜய!

THE INSTITUTION OF THE CHILDREN'S DAY.

குழந்தைகளே, சென்ற வருஷம் ஜூன் மாசம் 20-ந்தேதி யன்று இவ்விராஜதானியி லுள்ளவர்கள் மட்டுமல்ல, ஒவ்வொரு இராஜ தானியிலுமுள்ள பள்ளிக்கூடங்கள் தோறும் படிக்கும் குழந்தைகள் பாலபோத ஸமஷ்டி ஸேவைஸாதனமாக லார்ட் ஹார்டிஞ்ச் பிறந்த நாள் மஹோற்சவத்தைக் குழந்தைகள் தமக்கே யுரியநாளாகக் கொண்டாடினுர்கள். இப்படி லக்ஷம், கோடிக்கணக்கான குழந்தைகள் ஹிமாசலமுதல் கன்னியாகுமரிவரையில் ஏகாக் கிர சித்தம் கொண்டு லார்ட் ஹார்டிஞ்சவர் களும் அவருடைய பெருமாட்டியாரும் டில்லி நகர்ப்பிரவேசம் செய்யும்போது திடீரென்று அகஸ்மாத்தாய் நேர்ந்த ஆபத்து வேளையில் பக்தி வைராக்கியத்தோடு சாந்த சீலராய் மலை போல் வந்துற்ற துன்பத்தைத்தாங்கி, பகவத் கடாக்ஷத்தால் அது சூரியனைக்கண்ட பனி போல் நீங்கப்பெற்ற வைபவத்தைக் கொண் டாடினுர்கள்.

THE CHILDREN'S *FETE* AT SIMLA.

இப்படிக் கொண்டாடின "பாலர் மஹோற் சவதினம்" வீண் போகலாகாதென்று இந்த வருஷம் லார்ட் ஹார்டிஞ்சவர்கள் மே மாசம் 18-ந்தேதியன்று ஸிம்லாவில் சுமார் 15,000 குழந்தைகள் சேரக் களியாட்டம் கொண்டாடி மஹோற்சவத்தைச் சிறப் பித்தார்.

"I LOVE TO SEE THEM."

அப்பொழுது அக்குழந்தைகளோடு குழந் தையாய்க் கூடி விளையாடி அத்திருக் காட்சியைப்பார்த்து மனமுருகி "அவர்களைக் காண என் உள்ளம் உருகுகிறது" என்று பன் முறை செப்பினராம்.

"குழந்தைமுகம் பார்க்கக் கோடிகவலை தீரும்" என்பர். இது உண்மையென்று லார்ட் ஹார்டிஞ்சவர்கள் ரூபித்தார். பாலர்க்குப் பால னுய், தேவர்க்குத் தேவனுய், துஷ்டர்க்குக் கண்டனுய், சிஷ்டர்க்கு முண்டனுய் இலங்கும் தேவகுமாரனும் பாலதேவனைப் பணியும் பாக் கியம் பெற்ற பக்தர்களும் என்ன சொல்லி யிருக்கிறுர்களென்றுல்,

"பாலன் பாபங்கோல்
சீலன் எங்கள் கோன்
கோலஞ் சேர் குகன்
பால தேவனே"—யென்று

பண்பாடித்தொழுது வழுத்தியிருக்கிறுர்கள்.

THE ORGIN OF THE CHILDREN'S MOVEMENT.

சென்ற வருஷம் ஜூன் மாஸம் 20-ந்தேதி சாயங்காலம் இச்சென்னையைச் சேர்ந்த ராயப் பேட்டையிலுள்ள 'பாட்டர்ஸ்கார்டன்' என் னும் விசாலமானதோட்டத்தில் தென்சென்னை யிலுள்ள பள்ளிப்பிள்ளைகளெல்லாம் சுமார் 20,000 பேர்கள் வரையில் கூடியிருந்தார்கள். அப்பொழுது விளையாட்டுகளும் வேடிக்கைக ளும் நடந்தன. கடைசியில் விளையாட்டுப் பந் தயங்களில் ஜயித்தவர்களுக்கு மிஸ்டர் ஜே. எச், ஸ்டோன் அவர்கள் அக்கிராசனுதிபதியாக விருந்து பென்ஸிலும், பேனுவுமாகப் பரிசு வழங்கினுர். அப்பொழுது அக்கூட்டத்தின் மத்தியிலே ஒரு சிறுவன் பாலர் உபயோகத் துக்காக வென்று அச்சிடப்பட்ட விவேகசிந்தா மணி அனுபந்தத்தை * வைத்துக்கொண்டு எல்

---

* "The Vivekachintamani Children's Special."

லாருக்கும் வழங்கத்தவித்தான். 2,000 பிரதிகளை வைத்துக்கொண்டு 20,000 பிள்ளைகளுக்கு வழங்குவதெப்படி? இந்த தர்மஸங்கடத்திலிருக்கும் குழந்தையை அக்கிராசனாதிபதி கடைக்கண் பார்த்துக் காப்பாற்றினர். அச்சிறுவன் கையிலிருந்து கொடுத்த பிரதிகளையெல்லாம் வாங்கி எண்ணிக்கணக்கிட்டு, பரிசு வழங்கும் பொழுது அஃதொவ்வொன்றோடும் ஒரு பிரதி சிறுவர்க்கான விவேகசிந்தாமணி அனுபந்தத்தையும் கூடவைத்து வழங்கினர். இப்படியாகச் சென்னையில் பாலபோத ஸமஷ்டி சேவை ஸாதனம் அமுலுக்கு வந்தது. பின்னர் அங்கங்கே நடந்த வைபவங்களை வாசிக்கும் பொழுது பம்பாயிலும் இம்மாதிரியே நடத்தினர்களென்று தெரியவந்தது. பிறகு நமது அரசர் பிரதிநிதி சென்னைக்கு விஜயமாக வந்தபொழுது குழந்தைகள் யாவரும் அவருக்கும் கனம் ஹார்டிஞ்ச் பெருமாட்டியாருக்கும் வந்தன வழிபாடாக ஒரு பத்திரம் எழுதிச் சமர்ப்பித்தார்கள். அதில் லார்ட் ஹார்டிஞ்சவர்கள் குழந்தைகளுக்குச் சொன்ன புத்திமதிகளை "மூத்தோர்சொல்வார்த்தை அமிர்தம்" என்றபடி சிறுவர்கள் அமிர்தவசனமாகக் கொண்டு அந்தப்படி நடப்பதாக வாக்களித்தார்கள்.

"அந்த வாக்குத் தவறாமல் குழந்தைகள் நடந்துவர அவர்களுக் குழைப்பதில் ஊக்கங்கொண்ட விவேகசிந்தாமணியை பாலர்களுக்குபயோகமாகும்படி பாலபோத ஸமஷ்டி சேவை ஸாதன விளக்கமாக நடத்தவேணுமென்று கேட்டுக் கொண்டார்கள்.

THE PROMISES OF HELP AND CO-OPERATION.

இதைப்பற்றி வித்யா இலாகா அதிகாரிகளுக்கு எழுதியதில் அவர்களும் அனுகூலமாகவேயிருந்தார்கள். இடையிலே யோகசாஸ்திரங்களையும் உபநிஷதார்த்தங்களையும் பற்றியெழுதிவந்ததை நிறுத்தி பாலபோத சிக்ஷா சாதனமாய் விவேகசிந்தாமணியை நடத்திவர வேண்டுமென்று அதிகாரிகள் கேட்டுக்கொண்டார்கள். கேட்டுக்கொண்டதுமன்றி அப்படியே பிரயாணிக்கம் செய்து கொடுத்து பள்ளிப் பிள்ளைகளுக்கென்றே யுழைக்க வேண்டுமென்று கங்கணமும் கட்டிவிட்டார்கள். ஆண்டவன் சாக்ஷியாக அப்படி யுழைப்பதாகச் சொன்னோம். அவர்களும் இன்னல் செய்யாது இனியவையே செய்து ஸாதகமளிப்பதாகப் பிரமாணிக்கம் செய்து வாக்களித்தார்கள்.

THE INCIDENT AT HARROW.

இப்பொழுது நமக்குப் பாலர்க்குழைப்பதைத்தவிர வேறு வழியில்லை. லார்ட் ஹார்டிஞ்சவர்கள் திரிகரண சுத்தியாய் உழைப்பவர் என்பதற்கு அவரிடத்தில் ஒரு விசேஷம். அவருடைய பிள்ளை யொருவன் ஹாரோ (Harrow) பள்ளிக்கூடத்தில் படித்துக்கொண்டிருக்க, அவனைப்பார்க்கச்சென்றார். அப்பொழுது அச்சிறுவனோடு ஒரு காபிஹோட்டலுக்குப் போக இந்தியச் சிறுவனொருவன் அவன் ஆங்கிலத்தோழரோடு கூடிக்குலாவி யுலாவி வர "இங்கே இந்தியச்சிறுவர்களுக்கும் உங்களுக்கும் வித்யாஸம் ஒன்றும் பாராட்டுவதில்லைப் போலிருக்கிறதே" யென்றார். "ஆம்! நாங்கள் இந்தியர்களோடு சரிசமமாகப் பழகுவதன்றி வித்யாஸம்சிறிதும்பாராட்டுவதில்லை" யென்று அச்சிறுவன் தகப்பனாருக்கு பதிலுரைத்தான். அப்புறம் ஹாரோவில் படித்தவர்கள் எல்லோரும் கூடி ஹார்டிஞ்சவர்கள் இந்தியாவுக்கு அரசர் பிரதிநிதியாகப் புறப்பட்டுப் போகுமுன் 'ஸேவை ஹோடலில் (Savoy Hotel) அவருக்கு ஒரு விருந்தளித்தார்கள். அப்பொழுது ட்ரினிடி சாலேஜ் தலைவர் (Master of Trinity) அக்கிராஸநம் வகித்திருந்தார். இந்தியா மந்திரியாகிய மகாகனம் பொருந்திய லார்ட் க்ரு அவர்களும் அவ்விருந்துக்கு வந்தவர்களில் ஒருவராயிருந்தார். அவர்கள் முன்னிலையில் அவர் பேசியபொழுது இந்தியச்சிறுவர்க்கன்புகாட்டி அவர்களைச்சரிசமமாக நடத்துவது ஒரு பெரிய காரியமென்றும், நன்றி

பொருவர்க்குச் செய்தக்கால் அது வீண் போகாதென்றும், இந்தியச் சிறுவர்க்குச் செய்யும் உபகாரம் கல்மேலெழுத்துப் போல் அவர் உள்ளத்திற் பதிந்த பின்னுக்கு இராஜ்ஜிய க்ஷேமத்தையுண்டு பண்ணுமென்றும் சொன்னார்.

THE VICEROY'S PRSONAL INTERCOURSE WITH STUDENTS.

பின்னர் இந்தியாவுக்கு வந்த பிறகு கல்கத்தா ஹோஸ்டல்களில் வசிக்கும் மாணவர்களோடு 'மறைப்புறமாய்' இருந்து கூடிக்குலாவிப்பழகி அவர்களுடைய குணவிசேஷங்களைநேரில் அறிந்து கொண்டார். அதன் பின் டில்லிநகரப் பிரவேசத்தின் போது நேர்ந்த ஆபத்து வேளையில் அவருக்குக் குழந்தைகளிடத்துள்ள உள்ளன்பு கரைகடந்து பொங்கி தனக்குற்ற இடர்களை மறந்து அவர்களது சந்தோஷத்தையே பெரிதாக பாவிக்கும்படியான உத்தம சித்தத்தைக் கொடுத்தது. இந்த உத்தம பாவனந்தானே அவருடைய பெருவிபத்தை மாற்றுவதற்கும் காரணமாயிருந்தது.†

"யோக ஸம்யமத்தில்" நினைத்தது நினைத்தபடி கைகூடும். ஆகவே அவருக்குற்ற இன்னலை மறந்து குழந்தைகளது சந்தோஷத்தையே ஸ்மரித்தவராயிருக்க அவருக்கிருந்த குழந்தை மன மென்கிற உயர்பக்குவ சாதன விசேஷத்தால் உடலுக்கு நேர்ந்த பெருவிபத்து உயிர்க்குண்டான பரசிந்தையின் உற்சாக விசேஷத்தால் சூரியனைக்கண்ட பனிபோல் நீங்குவதாயிற்று.

THE SECRET OF SUCCESS: THE LESSON OF LIFE.

இந்த ரகஸியத்தைத்தான் குழந்தைகளும் பள்ளிப் பிள்ளைகளும் உணர்ந்துய்யவேண்டும். பள்ளியிற் பழகும் சிறுவர்கள் பெரியவர்களாகி ஜீவனோபாயம் தேடும்பொழுது அவர்களுக்கு உலகத்தில் ஸம்ஸார தொல்லைகள் எத்தனையோ உண்டாகுமென்பது நிச்சயம். அத்தருணங்களில் அவர்கள் ஸ்வயநயம் பாராட்டுவதை விட்டு பரோபகார சிந்தை மேலிட்டு இந்தியாவை க்ஷேத்திர மாதாவாக பாவித்துத் தாமெல்லாரும் அவளுடைய குழந்தைகளென்றுள்ளத்தில் ஓர்ந்துணர்ந்த ஏகிபாவத்தில் ஐக்கியப்பட்டு நின்றால், சமுத்திரத்தின் அலைகள் அதில் மூழ்கியிருப்பவனைப் பாதிக்காது மேலோட்டமாக ஓடியொழிவது போல், ஸம்ஸாரதொல்லைகளெல்லாம் ஸமஷ்டிசேவை ஸாதனபாவனை யப்பியாஸத்தினாலே உள்ளத்தினுறைக்காது மேலோடின வண்ணமாகத் தோன்றி மறையும்.

VALUE OF SOCIAL SERVICE AS *SADHANA*.

இது எப்படி யென்றால், சொல்கிறேன் கேளுங்கள்: மனிதன் ஏகாங்கியாயிருக்கும் பொழுது ஸ்வயநயம் பாராட்டுகிறவனாயிருக்கிறான். அவனே விவாகம் செய்து கொண்டு அன்பு வழிப்பட்டக்கால், பெண்டாட்டி பிள்ளைகளுக்குழைப்பதில் தன் கஷ்டங்களையெல்லாம் மறந்து அவர்களுடைய சந்தோஷத்தைப்பார்த்துத் தான் மனம் பூரித்து அதனால் தேஹமும் புளகாங்கிக்கப் பெறுகிறான். அப்படியே குடும்பியும் தன் குடும்ப விசாரத்தில் மூழ்கி ஸ்வயநயசித்தனாயிருக்கும் பொழுது தன் குடும்பத்தைப்போல் பல்கோடி குடும்பங்கள் க்ஷேத்திரமாதாவுதரத்தில் உதித்த ஜீவாணுக்கள் போல் அவளை யண்டிப் பிழைக்கின்றன வென்று ஸ்வகுடும்ப சித்தத்தைவிட்டு ஸ்வதேசகுடும்ப சித்தம் வாய்க்கப் பெறுவானாகில் அவனுக்கு அந்த உயர்பாவனையால் சிறுதொல்லைகளெல்லாம் சூரியனைக் கண்டபனிபோல் நீங்கிவிடுகின்றன. இது தான் ஸமஷ்டி சேவை பாவனம் (Ideal of Social Service) என்றுசொல்லப் பெறுவது.

"THE IDEALS OF SOCIAL SERVICE."

இந்த மாதிரிபாவனங்களை (Ideals of Social Service) விருத்திசெய்து பலப்படுத்திப் பயனை விளைப்பது எதுவோ அது ஸமஷ்டி சேவை ஸாதனம் என்று சொல்லப்படும். இத்தொழிலைச்செய்வதற் குதவியாயிருப்பது விவேகசிந்

†இது யோகபாவ ரசஸியம். இதை பாவனாயோகம் என்றும் சொல்லுவர் பெரியோர்.

தாமணி யாதலால் உபசார வழக்கில் இப்பத்திரிகைக்கு அப்பேர் வழங்கப்பெறுவதாயிற்று. உண்மையில் ஸமஷ்டிசேவைக்கு ஸாதனமாயிருப்பதுவிவேக ஞானமாம். அந்த விவேகசிந்தை முதிருங்கால் நாகஸர்பத்தின் விஷம் முற்றி நாகமணியாவதுபோல் அதுவும் விவேக சிந்தாமணியாக விளங்கும். அஹறப்பொருள்பாக்கியஸித்தியாம் இந்த விவேகசிந்தாமணியே ஸமஷ்டிஸேவைக்கு ஸாதகமாயிருப்பது. அதற்குப் புறப்பொரு ளுதவியாயிருப்பதெல்லாம் ஸாதனமாகும். இது நிற்க.

HOME CELEBRATIONS OF THE CHILDREN'S DAY FESTIVAL, 1914.

சென்ற சஞ்சிகையில் வெளியிட்டிருந்தபடி பாலர் திருவிழா இந்த வருஷம் வீடுகள்தோறும் குடும்ப ஸஹிதமாய் குழந்தைகளால் கொண்டாடப்பட வேண்டுமென்பதை யனுசரித்து, சென்ற மே மாசம் 31 தேதியன்று பானுவாரம் திருவல்லிக்கேணியில் இவ்விவேக சிந்தாமணிக்கு விஷயதானம் செய்து வந்து 'தமிழறியும் பெருமாளாகி' "எரிமலையைப் பிடித்தெழுதி உளச்கனிவால் சிவன்மலையில் தடுத்தாட்கொள்ளப்பட்டவரான" நமது நண்பர் வீட்டில் அவர் திருவருட் பிரஸாதத்தால் ஸ்ரீபால சுப்ரமண்ய கீர்த்தனைகள் செய்து பஜனைக்கிரந்தம் இயற்றியதை குமாரக்கடவுள் முன்னிலையில் அரங்கேற்றி அவர் திருவடிக்கு அர்ப்பணம் செய்யும் சமயத்தை முன்னிட்டு, காலையில் பஜனையும், மத்தியானம் பால தேவர்க்குப் பிரீதியாகச் சிறுவர்களுக்கு விருந்தும், சாயங்காலம் பாலபோத ஸமஷ்டிசேவை ஸாதன மஹோற்சவக் கொண்டாட்டமும் வைத்துக்கொண்டு இனிது நடந்தேறியது சுபகரமாயும் சந்தோஷபூரிதமாயுமிருந்தது. அத்தருணம் பாலர்கள் கூடிப் பெற்றோர் பெரியோர் சேரப் படித்துவந்த "பாலவினு" மற்றோர் பக்கத்தில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. இதை இங்கிலீஷ் படுத்தி குழந்தைகளுடைய மங்களவசனத்தோடு அந்த பாலவினுவையும் அரசர் பிரதிநிதிக்கு அர்ப்பணமாக அனுப்பச் சம்மதமாய்க் கூட்டம் கலைந்தது.

## THE CHILDREN'S DAY FESTIVAL

**(Celebrations at Home.)**

ANTHEMS, HYMNS AND CIVIC SONGS FOR CHILDREN.

வீடுகள் தோறும் பாலர் திருவிழாக்கொண்டாட்ட மகிழ்வுரை.

---

### THE CHILDREN'S PRAYER.

(From Gitanjali)

வரகவி ரவீந்திரநாத் தாகோரியற்றிய

"பிரார்த்தனைக் கொத்து."

---

1. அண்ணலே யுன்றனடிபணிந் தன்பன் செய்
விண்ணப்ப மீதையே வேண்டினேன் வரந்தரு
[வாய்!
2. ஏழையே னுள்ளத் துறைதரித்திர மத்தனையும்
பிழை திருத்தி நிர்மூல மாகவே தீர்த்திடுவாய்!
3. துக்கமொடு சந்தோஷம் வருவனவெ லாமையே!
மிக்கவெளி தாகநான் பொறுக்கவலி தந்திடுவாய்!
4. அன்புமிகுந் துனைத்தொழவே யாசைகொண்டே
[னம்மானே!
என்பணியும் வளரவேதா னெனக்குவர மருள்வா
[ய்நீ!
5. 'ஏழைபங் காளிநீ, யெனவறிந்தே னுனையுள்ளத்
தேழைகளை யொறுக்காவண்ண மெனக்குவலி தந்
[திடுவாய்!
6. கர்வமிகு வல்லாள கண்டரைக் கண்டுழிநான்
'ஸர்வமுநீ' யென்றவரைப் பணியாத படியெனக்குத்
[திடமருள்வாயென்னீச!
7 தினமெனக்கு நேருசிறு தொல்லைகளில் தலையி
[றங்கி
மனஞ்சிதறு துன்மனஸே சித்திக்க வரமருள்
[வாய்!
8. என்வலிதா னெவ்வளவே யாயிடினு மத்தனையும்
உன்வலியே யென்றுணர்ந் துனக்கடிமை யாகு
[மொரு
*தன்வலியை வேண்டினேனுன் எனக்கிந்த வலி
[யீன்று
என்னீச! எனையுனக்கின் னடிமையாக்கொ ளரு
[ள் புரிந்தே!

---

*தன்வலி—ஆத்மசக்தி.

[‘கவிசக்ரவர்த்தி’ யென்று இராஜப்பிரதிநிதியவர்களால் புகழப்பெற்ற ஸ்ரீமத் டாக்டர் ரவீந்திரநாத் தாகோர் அவர்கள் ‘கீதாஞ்சலி’ யென்னு மவர் மஹிமை பெற்ற கிரந்தத்திலிருந் தெடுத்து ஸ்ரீஹார்டிஞ்ச்ஜயந்தியை குழந்தைகள் திருநாளாக திருவிழாக் கொண்டாடும் பாலர்களுக்காகத் தமிழ் செய்யப்பட்டது இது.—C. V. S.]

## THE SONG OF CHILD.

"WHAT IS A CHILD?" "An Experiment A fresh attempt on the part of nature produce *the just man made perfect*: that is, to make humanity devine." The great thing is not to vitiate the experiment by interfering with it.—Mr. *Bernard Shaw*.

"The CHILD" then is HUMANITY made DIVINE. It is the father of Man *i. e.* of humanity as a whole.

"They reckon ill who leave me out;
When me they fly, I am the wings;
I am the doubter and the doubt,
And I the hymns the Brahmin sings."
—*The Song of the Child.*

### பால பகவத்கீதை.

பாலனைப் புறங்கையாற் தள்ள லாமோ!
பழவினை யால்வந்த பாக்கியம் போமோ!
ஏழைபோ லென்னைவிட் டோட லாமோ!
கோழைப்பட் டோடினு மோடுவார் ஒட்டம்நானே!

சீலன்நா னென்பதை மறக்க லாமோ!
சிவன்தான் நானின்றிப் பிறக்க லாமோ
மூலன்நா னென்பதை மறக்க லாமோ!
வேலவன் துணையின்றி வாழ லாமோ!

சந்தேகிப் பாரொடு சந்தே கம்நான்
வந்திப்பார் வந்திக்கும் கீத மும்நான்
சிந்திப்பார் சிந்திக்கும் சிந்த னைநான்
சந்திப்பார் சந்திக்கும் சந்தி நானே!

பாலனைத் தேவனென் றறிந் தார்க்குப்
பாக்கிய மெல்லாங்கை கூடுந் தானே
பாலனை வெறுத்துத் தள்ளி னோர்க்குச்
சீலமும் கோலமும் சிறப்பும் போமே!

## "BURNS' GIFT TO THE BAIRNS."

FIRST YEAR: "THE HONEST MAN."

"The honest man, though e' er so poor,
Is King of men for a' that."—*Burns*.

### யோக்கியன்.

யோக்கியன்தானே பாக்கியனுவான்.

"யோக்கிய னென்பான் யதார்த்தமுடையான்
போக்கிய மவனுக் கென்னதான் குறையினும்
யோக்கியதை யஃதுடன் குறையவே மாட்டா
தாக்கியும் அழித்தும் காப்பவன் அவனைத் தானே
பாக்கியம்எல்லாம் கொடுத்துக் காப்பன்காணே!"

யதார்த்தமாவது வாச்குப்பொய்யாமை.

## SECOND YEAR: "THE MAN OF FAITH."

Believe in God as the **Source of All**!
Have Faith in the *realising Power* of Will
And WORK! Failure then, is IMPOSSIBLE.

## THE CHILD'S QUERY.

"FATHER! WILT THOU CHERISH
OR LET ME PERISH?."

**To H. E. Lord Hardinge our Earthly King and Father.**

THE NEW-BORN SPIRIT OF RENAISANCE:—

"Father! I, the Child of ages past, rejected and dejected come to Thee,
"Tell me, Wilt thou cherish or let me perish? Prithee!"

*Vox populi*: "Great men with the child-heart conceive and plan it well; but the underlings blundering spoil it all."—*A Teacher of Children and Maker of men.*

### பாலவினு.

பல்லவி.

"அப்பா ‘நான் குழந்தை’—உனக்கு—
வேணுமோ, வேண்டாமோ"?

அநுபல்லவி.

"அப்பா‘நான் குழந்தை’யுனக்கு வேணுமோ,
[வேண்டாமோ?’
செப்பாயென் றழுதுகொண் டேனைவந் தடைந்
தையே பாலா!

சரணங்கள்.

1. அப்பா! "நான்குழந்தை" யுனக்கு
வேணுமோ வேண்டாமோ?

செப்பாயென் றழுதுகொண் டேனவந்
தடைந்தையே பாலா!
துப்பாய்நா னழுதுன்னைத் தரையிலே
தாயில்லாக் குழந்தையேபோ
லப்பாநீ கொள்ளென் றவன்கையிற்
கொடுத்தேனே பாவி!
தப்பாய்நான் செய்பிழை பொறுத்தென்னை
யாளவே யெண்ணிநீ
—(அப்பா 'நான் குழந்தை')—

2. பதிமூன்றோ டெழுமூன்றும் வருடங்கள்
பாரினிற் பக்திசெய்துன்னை
மதிவளர் வித்தையா வளர்த்தேற்
கெனக்கொண்டே யுனைத்தந்தாய்!
கதிமோசம் வாராமற் கண்பார்த்து
ரக்ஷித்த கருணையாலே
மதிமோசம் போயுன்றன் மஹிமை
யறியாரை நண்ணினேற்கு
விதிமோசம் வாராமல் வந்தென்னைக்
காக்கவே வதனங்குன்றி—
—(அப்பா 'நான் குழந்தை')—

3. வாக்குக் கொடுத்தவன் வாக்கு
வாங்கிப் பின்னர்
சாக்குப் போக்குச் சொல்லி
சண்டையு மிட்டதால்
வாக்குக் கொடுத்தவன் வாக்குத்
தவறவே வதனங்குன்றி
சாக்குச்சொன் ஞனைவிட் டிணையடி
மலர்ப்பாதம் தரையிற்பட
போக்குச்சொன் ஞனென்றுன் பொன்மேனி
வாடவே யோடிவந்து—
—(அப்பா, 'நான் குழந்தை')—

---

## The Viceroy's Message and India's Response.

### "Three Words of Strength."

"The Sovereign Lord his Message of Hope
did give ;
Our own true Lord, the Viceroy, gave us Faith!
'Tis now India's turn Her Supreme Message
to give :
And that's '*Love to thee and thine surpassing both Hope and Faith.*'

"I trusted myself and Lady Hardinge more to the care of the people than to that of the Police. If it was an error, it is an error that I am proud of and I believe it may yet prove not to have been an entirely mistaken confidence, for out of evil good may come . . . . "I will pursue without faltering the same policy in the future as during the past two years, and I will not waver a hair's breadth from that course."

"The fair fame of India must be restored to a high and unassailable plane . . . . have inspired me with confidence in the determinatiou of the people of India . . . . to restore to their Beautiful Motherland an untarnised record of fame.' ... My faith in India, its future and people remains unshaken."

The Message of Hope.

மன்னர் மன்னன் மஹிபனம் மரசன்
மூன்னரிம் மாநிலத் தேவந்து ளமொன்றிச்
சொன்னசொல் மனந்தேற தேற்ற முறுமென்ருன்!

The Message of Faith.

அன்னவன் தேற்றத்தோ டாற்றல ளிக்குமுள்
ளேற்றம தானவோர் பக்திகொள் வீர்பைய!

The Festive call of Love.

என்றண்ணல் உரைத்தவோர் உரைகேட்டுப் [பாலர்கள்
உளந்தேறி மனந்தேறித் திருவிழாக் கொண்டாடு [வார்.

Invocation.

அஹறந்தோறு மவரன்பால் கொண்டாடும் திருக் [கூத்தை
மஹறத்துக்கள் மகிழவே பண்பாட அருள்புரிவாய்!

---

## Holy Hymns in Praise of God.

பஜனை.

வரத விநாயகர் துதி.

"இபமா! முகனே! இதமா வரதா!
சுபமா கவுமே சுமுகா அருள்வாய்"
வரத விநாயக மூர்த்திக்கு—ஜயஜய!

ஸரஸ்வதி தேவியார்துதி

அயனர் அணியே! அறிவார் அறிவே
பயனும் ஒளியே! பதுமா ஸனியே!
ஸரஸ்வதி தேவிக்கு—ஜயஜய!

பரம்பொருள் துதி.

"அன்பே! அருளே! அழியா முதலே!
இன்பே! ரஸமே! இசையுட்சுவையே!
உன்பே ரொளியை உள்ளா துணராத்
என்பே யுருகாத் எங்குவனையே!"

### பாராசக்தி துதி.

தாயே! யமுதே! தனிமா விதியே!
தேயா அருளே! ஜகத்அம் பிகையே!
அம்பிகா தேவிக்கு—ஜயஜய!

### பாலாம்பாள் துதி.

அம்மா 'குட்டி' யுன்நாமம்
அருமையா மொரு வாலைரூபம்
சும்மாவிருந்துன் சொரூபத்தைக் காண்பான்
சுகியோ டுழைத்தேன் வெகுகாலம்
தர்மாவென்றுனை யுள்ளேபதிவித்துத் தாழ்ச்சியில்
மோனத்தால் அர்ச்சித்தேன் மெத்த
பிர்மாமுதல்வந்துன் மஹிமையைக் கண்டுதம்
கர்மாவொழிந்ததென் றசைவற்றமர்ந்தார்.

### 'குட்டியண்ணு' (திருமால்) துதி.

"கண்ணு! அண்ணு! கருணாகரனே!
பண்ணு! அண்ணு! பவநாயகனே!
மண்ணோர் உண்ண மணியே! முதலே!
எண்ணுருண்ணின் ஜெளிரும்மணியே!
விண்ணோ ரேற்றுமோர் சிந்தா மணியே !"

### திருமகள் துதி.

பூவே! பொலிவே! பொருளாம் வடிவே!
கோவே யெனையாள் குலதெய் வதமே!
லக்ஷ்மிதேவிக்கு ஜயஜய!

### பாலதேவன் துதி.

"பாலன் பாபங்கொல்
சீலன் எங்கள் கோன்
கோலஞ் சேர் குகன்
பால தேவனே"

### பாலபோத சிக்ஷாபரன் துதி.

போதமாய்ப் புலர்ந்தோய் நீ
புகழணுய்ப் பொலிந்தோய் நீ
நேயமாய் இருந்தோய் நீ
நின்னுணர்வு தந்தோய் நீ
என்னுணர்வி லுள்ளோய் நீ!
காடும்நீ கடலும்நீ கதிரும்நீ கதியும்நீ
கோடும்நீ குருவும்நீ குலமும்நீ குகனும்நீ
நானும்நீ! அவனும்நீ! அதுவும்நீ! எதுவும்நீ!
அப்பநீ! அம்மநீ! ஐயநீ! அமிர்தநீ !
அன்புநீ! அன்புடைய மாமனும் மாமியும்நீ!
ஒப்புடைய தாரமும் உண்பொருளுய்நீ!
ஓர் குலமும் சுற்றமும் ஒருவரும்நீ!
துணையா யென்னெஞ்சம் துறப்பிப்பாய்நீ!
இப்பொன்நீ! இம்மணிநீ! இம்முத்துநீ!
இறைவநீ! எறூர்ந்த செல்வும் நீயே!

### CHILDREN'S TRIBUTE OF LOVE TO THE VICEROY.

### அரசர் பிரதிநிதி வாழ்த்து.

## ஸ்ரீ ஹார்டிஞ்ச் பிரபு ஜயந்தி.

### குழந்தைகள் வாழ்த்துத் துதி.

"மூவாறுமாகிநின்றாள்: வித்தையொ டவித்தையாம்
கலைகளென்ன காமிய மென்ன!"—தேவி துதி.

ஹார்டிஞ்பிரபுவே! யருள்வலி யுடையோய்!
பாரிடிஞ்சாலும் வானிடிஞ்சாலும் பொய்யுரை
[சொல்லாய்!

பேரிடி முழக்கம் போலுயிர் வாங்கும் பாதகக்
கூர்வெடி குண்டினு லின்னுயிர் வாங்கவே
மாரிடி நெஞ்சம் நினைத்த வஞ்சகப் பேய்களின்
கூரிடிகாயம் பட்டுப் பதைத்து மூர்ச்சித்தபோதும்-
சீரடி சாந்தம் குறையா துள்ளம் தடுமாறுது
மானிடவெள்ளம் போலுள கூட்டத் திடையிருந்
[தையே

நுண்ணிடை மின்னு ளுன்பணி செய்யவே
கண்ணுடை வள்ளலே கருணையே உருவாய்
மின்னிடைத் தோன்றிய பொன்னுரு வெளிபோல்
மன்னிடைத்தோன்றிய மாதவக் கொழுந்தே!
உன்திரு நாளைப் பெருநாளாக் கொண்டாடக்
கூடின குழந்தைகள் நாங்களெல்லோரும் குதூஹ
[லத்துடனே

வாழிமிக வாழியென்று வாழ்த்துகிறேம் ஐய!
[வும்மை

பதிவிரதா சிரோமணியாய்ப் பாரிலுள்ளோர் துதி
[க்குமம்மை

ஹார்டிஞ்சு பெருமாட்டி யன்பிலேநீ ரேந்நாளும்
துன்பின்றி வாழ்கவென்று துதிக்கிறேம் கட
[வுளையே!

பாலதேவாலயம்
திருவல்லிக்கேணி
1914ஞ மேமீ 31௳

---

### THE FESTIVE CALL.

### To celebrate "the Children's Day Festival."

(20th June, 1914.)

## "பாலர் திருவிழாக் கொண்டாடுவோம் வாரீர்!"

(Specially composed to celebrate the *Children's Day Festival*, 1914.)

பல்லவி.

பாலர் திருவிழாக் கொண்டாடு வோம்வாரீர்!
சில முடன் மெத்த கோலம தாகவே,—
—பாலர் திருவிழாக் கொண்டாடுவோம்!

சரணங்கள்.

(2) பாலர் திருவிழாக் கொண்டாடு வோம்நாங்கள்
சாலவு மெத்தநல் ஹார்டிஞ்ச்ப்ர பூமகிழ்
வேலவன் லீலேசெய் ஞாலமெ லாம்புகழ்
சீல மிகுபால தேவனைத் துதித்துள்ளே,—
—பாலர் திருவிழாக் கொண்டாடு வோம்வாரீர்!

(2) மேலேநாட் சீர்மையில் நாமெல்லாம் பெரியோராய்
வேலேசெய் வேளையில் வில்லங்கம் வாராமல்
நாலேந்து மொன்ருக நாம்வளர்ந் துற்றபோ
தாலேயிற்க ரும்பேபோ லன்புமிகுந் தென்புருக,—
—பாலர் திருவிழாக் கொண்டாடு வோம்வாரீர்!

(3) தாய்தந்தை மகவெனும் திரிமூர்த்தி தேவர்கள்
வாய்பொத்திச் சேவைசெய் பகவான் ஒருவனைச்
சேயென்று மகிழ்ந்துளந் தாய்வாரிக் கொண்டாப்
[போல்,
தேயமெலாம்புகழ் 'ஹார்டிஞ்சஸ்' நாமாக 'ஹிரு
[தாஞ் சலீ'பாடி,—
—பாலர் திருவிழாக் கொண்டாடு வோம்வாரீர்!

(4) துன்பம்வந் துற்றானும் என்புறக் கிழியவே
அன்புமி குந்தம்மா! பாலரைச் சிந்தித்துள்
என்புதோல் போற்றிய வித்தேகம் வருந்தினும்
அன்புரு வாம்பாலர் மகிழ்வே பெரிதென்ற வள்
[ளலே வினேந்து
—பாலர் திருவிழாக் கொண்டாடு வோம்வாரீர்!

(5) தாயைப்போல் மகளென்னும் தூயர்சொல் மெய்க்
[கவே
சேயைப்போல் தாய்தந்தை மகவுந்தான் கூடியே
காயைப்பழ மாக்குபரங் கருணேயோ டொன்ருன
சேயைப்போல் மகிழ்ந்தாடு 'டயமண்ட்'பெண்
[மணிவாழ,—
—பாலர் திருவிழாக் கொண்டாடு வோம்வாரீர்!
சீல முடன் மெத்த கோலம தாகவே,—
—பாலர் திருவிழாக் கொண்டாடுவோம்!

---

## THE CHILDREN'S DAY FESTIVAL.

To H. E. Lady Hardinge, God Save
THE FOUNDER OF THE CHILDREN'S DAY.

### பாலர் திருவிழா.

தாயன்பாலென்னம்மை ஹார்டிஞ்சு பெருமாட்டி
தூயவராம் குழந்தைகளைத் தன்னிதயத் துள்ளிரு
[த்தி
சீயவராம்காவலர்கோன் ப்ரதிநிதியாம் பர்த்தாவின்
ஸ்ரீஜயந்தி கொண்டாடச் சொன்னவர்தம்குடிய
[னைத்துங் காத்தருள்வாய்!
அம்மா, தாயே! காப்பாற்று!
அடியேம் குழந்தைகள் சொற்கேட்டு.

---

'இன்றைப்போல் என்றைக்கும் கொண்டாடுவோம்.'

The Annual Celebration of the Day.
The Children's Resolve.

அம்மா, தாயே! மஹாராஜ்ஞி!
அடியேம் குழந்தைகள் உனைத்தொழுவோம்!
மிடிதீர ஹார்டிஞ்சு ஜயந்தி இன்றைப்போல்
என்றைக்கும் 'குடிவாழக்கோன்வாழக்' கொண்
[டாடுவோம்!
அம்மா, தாயே! காப்பாற்று!
அடியேம் குழந்தைகள் சொற்கேட்டு.

---

வாழி-Prayer for Blessings on the Country and the King.

வாழிமிகவாழியென்று வாழ்த்தவலி தந்தருள்வாய்
"வரப்புயர!" வென்றம்மை வாழ்த்தினர் கோனை
[யல்லோ
"வரப்புயர, வயலுயரக், குடியுயரக், கோனுயர"
வரந்தருவாய்! அம்மாதாயே! இதுநாங்கள் கேட்
[கும் பழம்.
அம்மா, தாயே! காப்பாற்று!
அடியேம் குழந்தைகள் சொற்கேட்டு.

*—From the Children's Anthem or Hridanjali.*

---

TO THE HONORABLE DIAMOND HARDINGE.

தாயைப் போல் மகளென்னும் தூயர்சொல் மெய்ச்
[கவே
சேயைப் போல் தாய்தந்தை மகவுந்தான் கூடியே
காயைப்பழ மாச்குபரங் கருணேயோ டொன்ருன
சேயைப் போல் மகிழ்ந்தாடு 'டயமண்ட்'பெண்
[மணிவாழ
பாலர் திருவிழாக் கொண்டாடி னேம்
சீலமுடன் மெத்த கோலம தாகவே—
—பாலர் திருவிழாக் கொண்டாடி னேம்.

சுபமஸ்து.